உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்



தொகுதி 6 } இரௌத்திரி ஸ்ரீ கார்த்திகைமீ கஉ
1920 ஸ்ரீ நவம்பர்மீ 16உ { பகுதி 5

## கடவுள் வணக்கம்.

பாகத்தி னாற்கவிதை பாடிப் படிக்கவோ
பத்திநெறி யில்லை வேத
பாராய ணப்பனுவன் மூவர்செய் பனுவலது
பாடவோ விசையு மில்லை
யோகத்தி லேசிறிது முயலவென் றாற்றேக
மொவ்வாதி வூண்வெறுத் தால்
உயிர்வெறுத் திடலொக்கு மல்லாது கிரியைக
ளுபாயத்தி னாற்செய் யவோ
மோகத்தி லேசிறிது மொழியவிலை மெய்ஞ்ஞான
மோனத்தி னிற்க வென்றால்
முற்றாது பரிபாக சத்திக ளனேகநின்
மூதறி விலேயெ ழுந்த
தாகத்தி லேவாய்க்கு மமிர்தப்ர வாகமே
தன்னந் தனிப்பெ ருமையே
சர்வபரி பூரண வகண்டதத் துவமான
சச்சிதா நந்த சிவமே.

---

கொழுந்து திகழ்வெண் பிறைச்சடிலக் கோவே மன்றிற் கூத்தாடற்
கெழுந்த சுடரே யிமயவரை யெந்தாய் கண்ணுக் கினியானே
தொழுந்தெய் வமுநீ குருவுநீ துணைநீ தந்தை தாயுநீ
யழுந்தும் புவநீ நன்மையுநீ யாவி யாக்கை நீதானே.

தானே யகண்டா காரமயந் தன்னி லெழுந்து பொதுநடஞ்செய்
வானே மாயப் பிறப்பறுப்பான் வந்துன் னடிக்கே கரங்கூப்பித்
தேனே யென்னைப் பருகவல்ல தெள்ளா ரமுதே சிவலோகக்
கோனே யெனுஞ்சொன் னினதுசெவி கொள்ளா தென்னோ கூறாயே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி ௵ கார்த்திகைமீ ௧௨

## நம் நாட்டார் செய்கை.

நம் தாய்நாட்டுச் சகோதர சகோதரிகளே ! மானிடராகப் பிறந்த நாம் செய்யுங்காரியங்க ளனைத்தும் செய்யவேண்டிய வொழுங்கோடும் அளவோடுமே செய்யப்பட வேண்டும். அப்படிக்கின்றேல் நம்முயற்சிகள் கைகூடாமற் போவதோடு குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்ட கதைபோல், நமக்கு இடையூறும் அவமானமும் நேர்வது உண்மை. முதலாவது எல்லாருக்கும் உணவு அவசியம். அந்த உணவில்கூட ஒருவன் தன் வருமானத்திற்குத் தக்க அளவாகவே புசிக்க வேண்டு மல்லவோ !

மாதம் நூறுரூபாய் வருமான முள்ளவன் பகலில் இரண்டு வேளை கூழ் அருந்தி இரவில் நொய்க்கஞ்சி பருகுவானாயின் அவனைப் புத்திமான், சிக்கனவான் என்று யாரேனும் கருதுவரோ. இல்லை; சுத்த அறிவற்ற உலோபியென்றே நிந்திப்பார்கள்.

அப்படிக்கின்றி, மாதம் பத்தேரூபாய் சம்பாதிக்கும் ஒருவன் தினம் ஐந்தாறுவகைப் பதார்த்தங்களோடும் பலகாரங்களோடும் புசிக்கமுயன்று கடனாளியானால், அவனையேனும் " மிக்க உதாரத்வமுடையவன், அறிவாளி " என்று புகழ்வரோ? ஒருபோது மில்லை. சுத்த மூடன், அறிவிலியென்றே நிந்திப்பர்.

அந்தோ! நமது நாட்டாரிற் பெரும்பாலார் எந்த விஷயத்தில் பிரவேசித்தாலும் அதில் ஒழுங்கீனமாகவும், அளவுகடந்த விதமாகவுமே நடந்துகொண்டு காரியசித்தி பெறாது விழிக்கும் பழக்கமுடையவர்களாகவே இருக்கிறார்கள் என்பது மிக்க விசனிக்கத்தக்க விடயமாக விருக்கிறது.

நம்மவர்கள் தூங்கினால் ஒரேமூச்சாக உறங்கிக் கிடந்து பிறகு "அப்பா! உறக்கம் வேண்டாம்; இனியதனால் கேடுண்டாகும்; விழித்துக்கொண்டு எச்சரிக்கையாயிரு" என்றால், விழித்து உட்கார்ந்து சோம்பலைப் போக்கிக்கொண்டு எச்சரிக்கையோடு கவனித்துக்

காரியங்களைச் செய்யாமல், துள்ளி எழுந்து தலைகீழாகக் குதித்து கைகால்களை யுடைத்துக்கொள்வது போன்ற நடக்கையுடையவர்களாக விருக்கிறார்கள்.

இப்போது சம்பவிக்கும் பெரும்பாலான வேலை நிறுத்தங்களைக் கவனித்துப் பாருங்கள். யார் எதைச் செய்வதாயினும் தேச நன்மை, அதாவது, பொதுசன நலத்திற்கு இடையூ றுண்டாக்கத் தக்க காரியத்தைச் செய்யலாகாது. அது தேசத்திற்கு நன்மை யளிக்கும் ஒற்றுமையான வேலையாகாது. திருட்டாந்தமாக டிராம் வண்டி வேலையாட்களின்வேலை நிறுத்தத்தைக் கவனித்துப் பாருங்கள். அதனால் அவர்கள் தங்கள் சம்பளத்தைக்கொஞ்சம் உயர்த்திக்கொண்டார்கள் என்பதுண்மையே. ஆனால் அப்பணம் எதிலிருந்து அவர்களுக்குக் கிடைக்கிறது? அவர்களின் முதலாளி அடைந்து வரும் அதிக இலாபத்திலிருந்தா? இல்லை. அதற்கு வேறே வரிவிதிக்கப்பட்டதுபோல் பொது ஜனங்கள் கொடுத்து வந்த டிராம்கூலி அதிக மாக்கப்பட்டது. இதனால் முதலாளிகளின் இலாபம் இன்னும் அதிகமாயிற்றே யொழிய அதிலிருந்து இவர்களுக்கு அதிக சம்பளம் கொடுக்கப்படவில்லை.

நம்மவர் முற்காலத்தில் எப்படியோ இருந்தாலும் பிற்காலத்தில் பத்துப்பேர் ஒன்றுசேர்ந்து ஆலோசித்து ஒரு பொதுநல விஷயத்தைச்செய்து முடிக்கும் வழக்க மில்லாதவர்களாக மாறிவிட்டார்கள். இப்போது சமீபகாலத்தில் எங்கும் சங்கங்களையும், சபைகளையும் தாபிக்கும் உணர்ச்சி தீவிரமாகப் பரவத்தொடங்கியது. அவற்றிற்குப் பெயர்களும் உன்னதமாக அமைக்கப்படுகின்றன.

ஆனால் சாதிபேதம், மதபேதம், கட்சிபேதம் இவைமட்டும் ஒழிக்கப்படவில்லை. பத்துப்பேர் கூடி ஒரு காரியத்தைச்செய்ய ஆலோசிக்கும்போது, அவர்கள் தங்களுக்குள் அறிவும், அநுபோகமும், பாரபட்சமின்மையும், விவகாரத்தில் சாதிமத கட்சி வித்தியாசம் கருதாத குணமுமுடைய ஒருவரைத் தங்கள் அக்கிராசனாதிபதியாக நியமித்துக்கொண்டு ஒழுங்காய் விவகாரத்தை நடத்தவேண்டும். ஒவ்வொருவரும் தத்தமது சுயநலத்தைப் பொது நலத்தின் முன் இலட்சியம் செய்யலாகாது. "கௌரவஸ்தானத்தை யெவன் பெற்றாலும் பெறட்டும், நமது பொதுவிஷயம் ஈடேறவேண்டுவதே நமது நோக்கம்" என்று கருதவேண்டும்.

அந்தோ! நம்மவர் தாபித்திருக்கும் சங்கங்களில் எல்லாம் மேற் கண்ட விஷயங்களில் கொஞ்சமேனும் தவறாது கவனிக்கப் படுகின்றனவா வென்பதை இதைவாசிக்கும் அறிவாளிகளே அநுபவமா யறிந்துகொள்ளக் கோருகிறோம்.

பெரும்பாலானசங்கங்களிலும் வாசகசாலைகளிலும் அவற்றில் சேர்ந்திருக்கும் அவயவிகள் தங்கள் வரையில் சௌகரியம் பெறவும் பலனடையவும் கருதுகிறார்களேயன்றி, தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு அவசிய காரியமாகிய பாமரசனங்களுக்குக் கல்வியறிவையுண்டாக்கும் விஷயத்தில் கவனம் வைக்கிறார்களில்லை. பத்துப்பேர் ஒன்றுகூடித் தலைக்கு ஒருரூபா பிரிவு போட்டுக்கொண்டு கேளிக்கையாகத் தோட்ட விருந்து (பிக்நிக்) நடத்துவது போன்றதேயாகும் இவர்கள் செய்கையும். அதில் சேர்ந்தவர்கள் மட்டும் நல்ல அறுசுவையுண்டி யுண்கிறார்களே யன்றி இரண்டு ஏழைகளுக்குக் கஞ்சியேனும் கிடைப்பதில்லை.

இவர்களுடைய கட்சி பேதம் மதவிஷயத்திலும் நுழைந்திருக்கிறது. சென்னைக்கருகிலுள்ள சிங்கப்பெருமாள் கோயில் என்ற ஸ்டேஷனிலிருந்து சுமார் ஒன்றேகால் மைல் தூரத்தில் திருக்கச்சூர் என்ற பாடல்பெற்ற சிவஸ்தலம் ஒன்றிருக்கிறது. அவ்வூர் சிறு கிராமமாயினும் அதில் கட்சி இரண்டாகிவிட்டது. இந்த விபரீதத்தால் அக்கோயில் திருப்பணியே தடைப்பட்டிருக்கிறது. இவ்வருடம் ஒரு கட்சி பிரம்மோத்ஸவம் நடைபெறவேண்டுமென்றது. இன்னொரு கட்சி நடக்கலாகாதென்றது. கடைசியில் எப்படியோ தெய்வ சங்கல்பத்தால் உத்ஸவம் நடந்தேறிவிட்டது. அடுத்த வருடம் இது நடப்பது சந்தேகந்தான்.

திருநெல்வேலி பேட்டையிலுள்ள சிவஸ்தலத்தில், இரண்டு தர்மகர்த்தாக்களாகிய கனவான்களுக்குள் நேர்ந்த சச்சரவின் காரணமாக, சில நாட்களுக்குமுன் சுவாமியின் பூசையே நிறுத்தப்பட்டதாக ஒரு சந்தாதார் நமக்கு அறிவித்துள்ளார்.

அந்தோ! நமக்கு எல்லாவற்றையும்விட ஆன்மார்த்தவிஷயமே உயிரினும் சிறந்தது. அப்படிப்பட்ட நாம் ஈசுவர கைங்கரியமே தடைப்படக்கூடிய அத்தகைய கட்சிபேதம் பாராட்டுவதாயின், நம் தாய் நாட்டின் க்ஷேமத்திற்காக எந்த யுகத்தில்தான் இத்தகைய அறிவீனச் செய்கைகளை விட்டு ஒன்று சேர்ந்து ஒருமனதாக உழைக்கப்போகிறோம். சிறு பிள்ளைகளுமல்லவோ நால்வர் கூடியே ஒரு விளையாட்டு நடக்கவேண்டியதாயின், அதில் விரோதமுடையவர்கள் உடனே அதை நீக்கி அந்தட்சணமே கூட்டாளி போட்டுக்கொள்கிறார்கள்.

ஐரோப்பா மகாயுத்தம் நேர்ந்தபோது இங்கிலாந்தில் "இப்போது நாம் யுத்தத்தில் தலையிடவே கூடாது" என்ற கட்சியும் இருந்தது. ஆயினும், அவர்கள் அதைப்பற்றி எவ்வளவோ வாதித்தும் கடைசியில் இராஜாங்கம் நாம் தலையிடவேண்டியது அவசியமே யென்று தீர்மானித்து விட்டபோது, அக்கட்சியைச் சேர்ந்தவர்களும் மற்ற கட்சியைப்போலவே தங்கள் கடமையைச் செலு

த்தவேண்டி, பொருளுதவியும் தேகவுதவியும் செய்து யுத்தமுனையில் தங்கள் இரத்தத்தைச் சிந்தித் தாய்நாட்டின் க்ஷேமத்தையும் கௌரவத்தையும் நிலை நாட்டினார்கள்.

நம்மவர்களாயின் பெரும்பாலோர் "நாம் வேண்டாமென்ற போது நமது சொல்லைத் தள்ளிவிட்டு யுத்தத்திற்குப் போகிறார்கள். சட்! நாம் அதில் பிரவேசிக்கவேகூடாது. அவர்கள்போய் தோற்று அவமானப்பட்டு வந்தால்தான் புத்திவரும். அப்போது நாம் 'எங்கள் பேச்சைச் சட்டை செய்யாமற் போனீர்களே. பார்த்தீர்களா உங்கள் கதியை' என்று கேட்கலாம். சண்டை வேண்டுமென்றவர்கள் உதவிசெய்யட்டும், நமக்கு அவசியமில்லை" என்று முரண்பட்டு இன்னும் அதற்குப் பிரதிகூலமான காரியங்களையும் செய்வார்கள்.

நண்பர்களே! நாம் இவ்வாறு கூறுவதற்காக நம்மேற் கோபங் கொள்ளமாட்டீர்களென்று நம்புகிறோம். உண்மையில் நாம் மேல் நாட்டாரின் மேற்கண்ட குணத்தையும், நடக்கையையும் பின்பற்றி நடக்கிறோமா, அதற்காக முயற்சியேனும் எடுத்துக் கொள்கிறோமா வென்பதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். அதோடு நாம் எத்தகைய விஷயங்களில் அவர்களைப் பின்பற்றுகிறோம் என்று பார்ப்போம்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையினானே" என்பது நன்னூல் ஈற்றில் கூறப்பட்ட ஒருபுறநடைச்சூத்திரமாகும். அது பாஷையில் வார்த்தைகள் கழிக்கப்படுவதுசேர்க்கப்படுவது முதலியவற்றைப்பற்றிக் கூறவந்த சூத்திரமாகும். அதைத் தவறாக இலௌகீக ஆசார விஷயங்களுக்காக உபயோகித்துக் கொள்வதாயினும், "காலத்திற்குத் தக்க விதமாக ஆசார ஒழுக்கங்களில் பழையவற்றை விட்டு விடுவதும், புதியவற்றைக் கைக்கொள்வதும் குற்றமல்ல" என்பதே இதன் பொருளாகும்.

நம்மவர்கள் இதை யாதாரமாக வைத்துக்கொண்டு கண்மூடித்தனமாக எதிலும் அன்னியரைப் பின்பற்றுவதில் மிக்க சுறுசுறுப்புடையவர்களாக விருக்கிறார்கள். நமது தேச நிலைமைக்கும், மதத்திற்கும் ஒத்தனவாய் நம் முன்னோர் ஏற்படுத்தியுள்ள ஆசாரங்கள், விதிகள் முதலியவற்றை யலட்சியம் செய்கிறார்கள். இது நமக்குத் தகும் தகாது,நன்மை பயக்கும் தீமைபயக்கும் என்பவற்றைக் கருதாமலே அன்னியர் ஆசாரங்களைப் பின்பற்றுவதே நாகரீகச் சீர்திருத்தம் என்று மயங்கி யிருக்கிறார்கள். அன்னியர் ஆசாரங்களில் கால மாறுதலின்படி எதை நாம் கைக்கொள்ளவேண்டுமோ அதைக் கைக்கொள்ளுகிறார்க ளில்லை.

மேல்நாட்டாரிடமுள்ள ஒற்றுமை, தேசபக்தி, மதப்பற்று, தேசப்பற்று, தாய் நாட்டிற்காகப் பிராணனையும் தத்தம் செய்யும்

திரம், மதாபிமானம், தேசாபிமானம், ஜாதியபிமானம், யுத்தப்பிரியம், ஆபத்து காலத்தில் எந்தச்சாதியார் எம்மதத்தினராயினும்சரி, அவர்களுக்கு உதவி செய்வது, எத்தொழிலையும் காலக் கிரமப்படி ஒழுங்காயும், பூரணமாகவும் செய்தல், ஒன்றைச் செய்யுமுன் ஆலோசனை செய்தல், தாய்நாட்டின் க்ஷேமத்தைப் பற்றிய பொது விஷயத்திற்காக வேலை செய்யும்போது, ஒருவர்மீதொருவருக்குள்ள விரோதத்தையேனும் கட்சிபேதத்தையேனும் கவனியாது, சுயநலங் கருதாது ஒற்றுமையாகச் செய்தல், சேவகா விர்த்தியினும் வர்த்தகம், கைத்தொழில் முதலிய சுயாதீனத் தொழில்களையே கௌரவமாகக் கருதல், சுயாதீனப் பிரியம், ஆகிய இத்தகைய குணங்கள் நடக்கைகளை நம்மவர்கள் பின் பற்றுகிறார்களா வென்று பார்த்தால், அந்தோ ! அவற்றைக் கவனிப்பதாகவே தோன்றவில்லை.

மற்றபடி நம்மவர் என்ன விஷயங்களைப் பின்பற்று கிறார்கள்? பெரும்பாலும் நமது இலௌகிக மதாசாரங்களுக்கு விரோதமானவைகளிலும் நமக்கு அகௌரவத்தையும் கெடுதியையும் உண்டாக்கக்கூடியவைகளிலும் அவர்களைப் பின்பற்றுகிறார்கள். இவற்றைக் கண்டு அவர்கள் நம்மை ஏளனம் செய்கிறார்கள். அன்னியபாஷையைக் கற்பதாலேயே அந்த ஆசாரங்களைப் பின்பற்றுதலே கௌரவம் என மதிக்கிறார்கள். ஒருவர் ஒரு சஞ்சிகையில் "நம்மவர் கலியாணத்தில் வீணாய் அதிகப் பணத்தைச் செலவு செய்கிறார்கள். மூன்று நாட்கள் கலியாணம் அநாவசியம். உறவின் முறையார் பத்துப்பேர்கூடிப் பெண்ணையும் பிள்ளையையும் வாழ்த்தி மங்கிலிய தாரணம் செய்துவிட்டு இருவர்க்கும் புத்திமதி கூறிவிட்டால்போதும்" என்று வரைகிறார். ஒருவர் "மேல் நாட்டாரைப்போல் பெண் தனக்குப் பிரியப்பட்ட புருடனை மணக்கும்படி செய்வதே தகுதி" என்கிறார். இன்னும் சில விஷயங்களில் நம்மவர் வெளிவிவகாரங்களில் மட்டும் மேல் நாட்டாரைப்போல் வேடந்தரித்துக்கொள்கிறார்கள். காரியத்தில் மட்டும் அவர்களைப்போல் நடப்பதில்லை.

தாம்கெடுவதன்றித் தம்மக்களையும் சிறுவயதிலேயே அத்துறைகளில் பழக்கிவைக்கிறார்கள். கேட்டால் "த்சே-சின்ன பசகளுக்குக் கூடவா நிபந்தனை, பிறகு தாமே தெரிந்து கொள்வார்கள்" என்கிறார்கள். அந்தோ! இவர்கள் "தொட்டிற்பழக்கம் சுடுகாடுவரையில்" என்பதை யறியார்கள் போலும். பழயனகழிதல், என்பதனானே பூர்வ ஆசாரங்களனைத்தும் விட்டு விடவேண்டுமென்று கருதுகிறார்கள். அநாதிகாலம் முதல் அரிசி கேழ்வரகு முதலியவற்றைப் புசித்துவருகிறோம். இனி புல் அல்லது வைக்கோல் புசிக்கப்பழக வேண்டுமென்பர்போலும்.

இவற்றிற்கெல்லாம் காரணம் நம்மவர்க்கு நம் தாய்ப்பாஷையிற் பக்தி சிரத்தை குன்றியிருப்பதும், நம் மக்களுக்கு மதாசாரக் கல்வி

யேபுகட்டப்படாததுமாகும். இதனால் இவர்கள் நம்முன்னோர் ஆசார ஒழுக்கங்களின் சிறப்பையும், தாய்ப்பாஷையின் தெய்வீக மேன்மையையும் உணராராகி அன்னிய ஆசாரங்களைச் சிறந்ததெனமயங்கி, முடிவில் ஹிந்துக்கள் என்ற ஒருஜாதியும் ஹிந்துமத மென்பதும் அடியோடு மறைந்து விடத்தக்க பாதையில் செல்கிறார்கள். சீக்கிரம் நம்மவர் சிரத்தை யெடுத்துக்கொண்டு தம்மக்களை நன்னெறியிற் பழக்கினாலன்றி, நம் தாய்நாட்டின் க்ஷேமத்திற்கு நம்நாட்டு அறிவாளிகள் படும் பெரும்பாடெல்லாம் மணல்மேட்டிற் பெய்த பால் போலாகும். எங்கணு நிறைந்த தண்ணருட்செல்வனும் பசுபதியே நம்மவர்க்கு நல்வழிகாட்டப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் ஸத்.

---

## தாயுமானவர் சரிதை.

நண்பர்காள்! கடந்த புரட்டாசி மாதச் சஞ்சிகையில் 90-வது பக்கத்தில் வெளியிட்டுள்ள தாயுமானவர் சரிதையின் முடிவில் நாம் வரைந்துள்ள குறிப்பில், நாம் கண்ட தாயுமானவர் பாடல் பழைய பிரதியொன்றில் அவர் பரிபூரணதசை யடைந்த சமயம் கரபாத்திர சுவாமிகளும், வேறு சில மகான்களும் இருந்து சரமகவிகள் பாடியதாகவும், அவற்றில் கரபாத்திர சுவாமிகள் அருளியபாடலின்படி தாயுமானவர் அடைந்த காலம் இன்னதென்று தெரிகிறதென்றும் எழுதியிருந்தோம். இப்போது நாம் எழுதியதில் கவனத்தவறால் கொஞ்சம் பிசகு இருப்பதாகத் தெரிகிறது.

இப்போது நமது சந்தாநேயர்களில் ஒருவரான தூத்துக்குடி ம-ா-ா-ஸ்ரீ கொ. ந. சங்கரப்ப நாயுடு என்பவர், நாம் குறித்த பழைய பிரதி தாயுமானவர் பாடல் ஒன்றை மிக்க தயவோடு நமது பார்வைக்கனுப்பியுள்ளார். அதற்காக அவருக்கு மிக்க வந்தன மளிக்கிறோம். அதிலுள்ளபடி தாயுமானவர் அடைந்த காலத்தில் இருந்த மகான்கள் யாவரென்பதையும் அவர்கள் அருளிய பாடல்களையும் ஈண்டு வரைகிறோம். இதன்படி நாம் முன் கூறியதைத் திருத்திக் கொள்ளக் கோருகிறோம்.

தாயுமானவர் அடைந்த சமயம் அங்கிருந்தமகான்கள் கோடிக்கரை ஞானியார் 1, அருளைய சுவாமிகள் 2, வாலையானந்த சுவாமிகள் 3, கரபாத்திர சுவாமிகள் 4, சைதன்னியானந்த சுவாமிகள் 5 ஆக ஐந்து பேர்கள் ஆகும். இவர்க ளனைவரும் சுவாமிகளின் சீடர்கள்.

### அவர்களருளிய பாடல்கள்.

### 1. கோடிக்கரை ஞானியார்.

துகளறுசாலி வருடமாயிரத்தைஞ் ஞூற்றெட்டெண் பத்தொன்று தொடரு
மிகுசுப கிருதாம் வருடந்தை மாதம் வெண்மதி வாரநாள் விசாக
மகிமைசேர் பூரணத் திதியினிலருத்த மண்டல சமயத்திற் கங்கை
திகழ்கரை யதனிற் றாயுமானவனார் சிவத்தினிற் கலந்ததாந் தினமே.

("தாயுமாஞ் சிவநற் சிவத்தினிற் கலந்ததாந் தினமே"
என்றும் பாடமுளது.)

## 2. அருளைய சுவாமிகள்

உலகினுக் கணியா மிராமநா தபுரத் துயர்கரை வாவியின் குணபால்
மலர்நிறை வனத்திற் சிவத்துறு நிட்டை மருவிமெய் யொருவிவே தாந்தத்
திலகிய பொருளாய் வானமாய் நிறையு மெந்தையே யெனதுபந் தமும்
நிலையுற நினது திருவரு ளளிப்பாய் நின்மலா னந்தமே போற்றி. [போய்

ஆமை போலு மைந்தடக்கி யனலோ ரைந்தி னடுவிருந்து
நாம ரூப மற்றதுவாய் நாடற் கரிதாய் ஞானசிவ
யோம மௌன வுன்மனேக்கு மேலாய் நிறைந்த வோருணர்வே
தாமே தாமாய் நின்றதாயு மான சிவத்தின் சரண்போற்றி.

## 3. வாலையானந்த சுவாமிகள்

தேனுறு வாவி குணதிசை யதனிற் செறிந்திடு நந்தன வனத்திற்
றீனமில் லாத சிவத்வொடு சிவமாய்ச் சேர்ந்திடச் சிறந்திறந் திலக்கும்
பானுவிற் றிகழ வெண்கருப் பூர மலையெரி படர்ந்திடு மொளியாய்
னென நிறையுந் தாயுமாஞ் சிவமே வாழிநின் மலர்ப்பதம் வாழி.

## 4. கரபாத்திர சுவாமிகள்

சூழுமுச் சுழுத்தி பாழென வுணர்த்தித் துரியமீ துற்றசூ னியமாம்
பாழையுங் கடந்த வறிவுநீ யென்றே பகர்ந்தருள் புரிந்தினிப் பிறவா
வாழ்வையு மளித்த சற்குரு மணியே மறைசையி லுதித்தெழு மருந்தே
தாழ்வுளே னெனையிங் கிருத்தியெங் கொளித்தாய் தந்தையுந் தாயுமான
[வனே.

## 5. சைதன்னியானந்த சுவாமிகள்

கங்கைமுதற் புண்ணியதீர்த் தங்கட் கெல்லாம்
காசினியிற் றேவதா வாவி யென்னும்
மங்களலட் சுமிதீர்த்தக் கரையின் கீழ்பால்
வளம்பெறுநந் தனவனப்பூங் காவிலென்றுந்
தங்குச்தா நிட்டைபர ராக வுள்ளந்
தனினினைந்து வில்வமர நீழ லின்கண்
டிங்களெனப் பூரணமாந் தாயு மான
சிவமேநின் பொற்கழலென் சிரமேற் கொள்வேன்.

மேற்கண்ட கவிகளால் தாயுமான சுவாமிகள் சாலிவாகன சகாப்தம் 1581௵, கலியுகாதி 4760௵, கி.பி. 1659௵ ஆகியசுபக்கிருது௵ தைமீ பௌர்ணமிதிதி, விசாக நட்சத்திரம் இவை கூடிய சோமவாரம் அர்த்தமண்டல சமையத்தில் பரிபூரண தசையடைந்தன ரெனவும், அவர் அடைந்த விடம் இராமநாதபுரத்தினருகிலுள்ள இலட்சுமிதீர்த்தம் என்ற தடாகத்தின் கிழக்கிலுள்ள நறுமணம் வீசும் மலர் விருக்ஷங்கள் நிறைந்த வனத்தில் வில்வமரத்தின் கீழ் என்றும் ஐயமற அறியலாகும்.

நமது சந்தா நேயரில் ஒருவராகிய மேட்டுப்பாளையம் ம-ா-ா-ஸ்ரீ. T. S. பசுபதி அய்யர் அவர்கள் தண்டபாணி சுவாமிகளாலியற்றப்பெற்ற புலவர் புராணத்தில் கூறியுள்ள தாயுமானவர் சீவிய சரிதையில், "பாதியுடல் வெந்திட்டபின் நிட்டைதவறி * * *" என்றகவியில் தாயுமானவர்

"தீதிழைத்தவன் வங்கிசங் கெடுக"வென்ரோர்சொல் சொன்னரென்று கூறப்பட்டிருப்பதாக அக்கவியையே வரைந்தனுப்பியுள்ளார்.

இக்காலத்தில் எழுதப்பட்ட இந்நூலில் கூறப்பட்டுள்ள இவ்விஷயம் ஒப்பத்தக்கதல்ல வென்பதே நமதுதுணிபு. ஒரு நூலாசிரியரின் நிலைமையை யவர் நூலினலறியலாகும். கொஞ்சம் கல்வி யாராய்ச்சியுடைய ஒரு சாதாரண மனிதனே தனக்கொருவன் தீங்கிழைத்தால் "இது நம்வினைப் பயன்; அவனை நோவது மூடத்தனம்" என்றுணர்கிறன். மெய்ஞ்ஞானச் செல்வராகிய அம்மகான் அவ்வளவு பொறையின்றி 'தீதிழைத்தவன் வங்கிசங்கெடுக' என்று சபித்தாரென்பது நம்பத்தக்கதன்றும்.

அந்த வங்கிசத்திற்கு அழிவு நேர்ந்திருக்கலாகும். அதனுனே அவர் சபித்தாரெனல் தகாது. அதற்கு வேறு காரண மிருக்கவே யிருக்கிறது. ஞானியின் தேகம்தகிக்கப்பட்டால் அதனுல் நாட்டிற்கும், அரசுக்கும் தீங்குண்டாகு மென்றதைப்பற்றி நம் ஐப்பசிமீ சஞ்சிகையில் 137-வது பக்கத்தில் கூறியிருப்பதைக் கண்டுணர்க. மேலும் ஞானிக்குத் தீங்கிழைத்தவன் கடவுளால் சீக்கிரத்தில் தண்டிக்கப்படுகிறன் என்பது யாவருமறிந்த விஷயம்.

மேல்கூறிய இவ்விஷயத்தையே நமதுநண்பர் T. S. ப. அய்யர் அவர்கள் தாம் நமக்கு எழுதியகடிதத்திற்கு விடையாக மதிக்குமாறு வேண்டிக் கொள்கிறேம். ஓம் தத்ஸத். ஆ. போ.

---

## கைவல்ய நவநீதவசனம்

(140-ம் பக்கத்தொடர்ச்சி.)

### சந்தேகந் தெளிதற் படலம்.

சந்தேகங்களை யகற்றித் தெளிவையளிக்கும் பாகம் என்று இதற்குப் பொருள். குருதத்துவ உற்பத்தி யொடுக்கங்களையும், ஆன்மதரிசனம் பெறும் உபாயங்களையும் சீடனுக்கு உபதேசித்தபின், சந்தேகங்களுளவேல் அனுபவ ஞானம் நிலைத்து நிற்காதாதலின், சகல அய்யங்களையும் களைவான் ரெடங்கி இப்படலத்தைக் கூறலுற்றர்.

உலகில் மனிதர் குழிதோண்டி ஒரு கம்பத்தை யதில் நாட்டின், அதைச்சுற்றிக் குழியில் கற்களைப்போட்டு குத்திக்குத்திக் கம்பத்தை உறுதியாக நிலைக்கச் செய்கிறர்கள். அதுபோலவே, குருவும் பரமான்மசொரூபத்தில் அபேதமாகக் கலந்து நின்ற சீடனுடைய அநுபவம் சலனமின்றி நிலைத்து நிற்குமாறு இச்சந்தேக நிவர்த்தியைக் கூறுகிறர்.

தமது நிழல் போல தம்மைவிட்டுப் பிரியாது அன்போடு பற்றியிருக்கும் சற்சீடனை நோக்கி,

குரு:—"மைந்தனே! நாம் இதுகாறுங் கூறியபடி யான் எனதென்பதும், தன்மை முன்னிலை முதலியனவுமாகிய விகற்பங்களெல்லாம் ஒழிந்து கூடஸ்த சொரூபமாகிய சாக்ஷி மாத்திரமாகவே இருக்கின்றனையோ? மனதினிடத்திருந்த சந்தேகங்களனைத்து மொழிந்தனவோ? தெளிவடைந்த உள்ளத்தினிடத்தில் இரண்டற்ற அயிக்கிய நிலை சித்தித்ததோ? உன்னுடைய அனுபவம் யாது கூறுதி" என்று கருணையோடு கேட்டனர்.

• சீடன்:—அடிகாள்! தங்களது கருணையோடு கூடிய உபதேசமாகிய ஞாநாதித்தன் முன் அடியேனது அஞ்ஞானமாகிய இருளும், சந்தேகங்களாகிய நிழல்களும் எங்கேனும் தலைகாட்டி நிற்கக்கூடியவைகளோ? ஆயினும் ஒரு மந்திரவாதியால் ஓட்டப்பட்ட பேயானது தேகத்தைவிட்டு நீங்கியபோதினும், அது மறுபடிவந்து சேராவகை எந்திரம் எழுதிக் கட்டுவதுபோல், தங்களுடைய அரிய ஞானோபதேசத்தால் அஞ்ஞானமாகிய மயக்கம் ஒழிந்தபோதிலும், என் அனுபவம் நிலையாகத்திரப்படும் பொருட்டு அடியேன் தங்களைக்கேட்டுத் தெளிந்து கொள்ளத்தக்க சில ஐயங்களுள. அவற்றைச் சந்நதியில் விண்ணப்பித்துக்கொள்கிறேன்.

சுவாமிகள்முன்னர் "மஹாவாக்கியங்களை யுபதேசித்தருளியபோது, "அஹம்பிரம்மாஸ்மி" என்ற சுருதிப் பிரமாணத்தால் உனது நிஜசொருபத்தை நீ யறிதி" என்றருளிய பிறகு, " அகண்டாகார சொரூபமாகிய பிரம்மமானது சுருதிவாக்கியத்திற்கு கோசரமாகாது (எட்டாது) என்றருளினீர்கள். அவ்வாறே " உன்மனதினால் உன்னையறிதி " என்றருளிப் பிறகு, "பிரம்மமானது துக்கமயமாகிய இம்மனதிற்கு எட்டாச் சுயம்பிரகாசம் " என்றருளினீர். இதனால் இரண்டு சங்கைகளுண்டாயிருக்கின்றன. அவற்றை நீக்கியருளப் பிரார்த்திக்கிறேன்" என்றான்.

முதல் கூறியது.— " பிரம்மம் வாக்குக்கு எட்டும்-வாக்குக்கு எட்டாது" என்பதாம்.

இரண்டாவது கூறியது.— " பிரம்மம் மனதிற் கெட்டும்-மனதிற் கெட்டாது " என்பதாம்.

இவை யொவ்வொன்றும் " எட்டும் - எட்டாது" என்று முரண்படுவது காண்க.

(இவற்றில் முதலாவதற்கு விடை கூறப்படுகிறது)

" மைந்தனே ! பரப்பிரம்ம சொரூபமானது நாமரூபம், கறுப்பு, சிவப்பு முதலிய நிறம், நெட்டை, குட்டை, பருமன், சன்னம் முதலிய எவ்வித இலட்சணங்களும் உடையதல்ல; பஞ்ச பூதங்களில் ஒன்றுமல்ல; இவை இரண்டுமல்ல; ஆகையால் கரணங்களாலாவது, இந்திரியங்களாலாவது அறியக் கூடியவஸ்துவல்ல. இதனால் அது பிரத்தியட்சப் பிரமாணம், அநுமாணப் பிரமாணம், உபமானப்பிரமாணம் ஆகிய முதல்மூன்று பிரமாணங் கட்கும் எட்டாது.

அஷ்டப்பிரமாணங்கள்.—உப நிடதங்களில் எட்டுவிதப் பிரமாணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

அந்தக் கரண விர்த்தியாலறியத்தக்கவஸ்து எதுவோ, அதற்குப்

பிரமா என்று பெயர். பிரமாவையறியக்காரணமாக விருப்பது எதுவோ அதற்கே பிரமாணம் என்று பெயர்.

(1) பிரத்தியட்சம், (2) அநுமானம், (3) உபமானம், (4) சத்தம், (5) அருத்தாபத்தி, (6) அநுபலப்தி, (7) ஐதீகம், (8) ஆகமம் எனப்பிரமாணங்கள் எட்டாம்.

(1) **பிரத்தியட்சப்பிரமாணம்.**—இது கண்காட்சி யாக நேரில் ஒரு பொருளைக்கண்டு இதுதான் இப்பொருள் என்றறிவது. நாம ரூபவஸ்துக்களே இப்பிரமாணத்தால் காணத்தக்கவை. இதற்கு மனோவிர்த்திவேண்டுவதின்றாம்.

(2) **அநுமானப்பிரமாணம்:**—இது பிரத்தியக்ஷமாய்க்காணும் ஒரு வஸ்துவைக்கொண்டு, அவ்வாறு முன் கண்டிருக்கும் அநுமானத்தால், காணப்படாத வேறொருவஸ்து இருக்கிறதென்றறிவது. இதனால் இதைப் பிரத்தியட்சப் பிரமாணத்தில் அடக்கிக் கூறுவதும் உண்டு.

இது ஓரிடத்தில் புகையிருப்பதைக்கண்டு அங்கு நெருப்பிருக்கிறது என்று உணர்வது போன்றது. நெருப்பி னிடத்துப் புகை யுண்டாவதை முன்பு கண்டிருக்கும் அநுமானத்தால், இப்போது புகையைக் கண்டவிடத்தில் அக்னி இருக்கவேண்டு மென்று ஒருவன் உணர்கிறான்.

(3) **உபமானப்பிரமாணம்.**—அறியாத ஒரு பொருளை யுணர்த்தும் பொருட்டு அதுபோன்ற அறிந்த ஒரு பொருளைத் திருட்டாந்தம் காட்டுகிறோம். அப்படிக்காட்டப்படும் திருட்டாந்தமே உபமானம் எனப்படும். மானைக்காணாத ஒருவன் காட்டில் அதைக்கண்டறிந்து கொள்ளும் பொருட்டு "மரை பசுப்போலிருக்கும்" என்கிறோம். இதுவே உபமானப் பிரமாணத்திற்குத் திருட்டாந்தம். இதில்பசு உபமானமாகும். உபமானத்தால் அறியப்படும் பொருளுக்கு உபமேயம் என்று பெயர்.

(4) **சப்தப்பிரமாணம்.**—ஆப்த வாக்கியம், அதாவது நம்பிக்கையுடைய ஒரு நண்பன் கூறுவதால் ஒன்றையுணர்வது. தன் தந்தையோடு, அன்னிய தேசம் சென்றிருந்த நண்பன் ஒருவன் திரும்பி வந்து "உன் தந்தை யங்கு இறந்துபோனார்" என்று கூறுவது போன்றது சப்தப்பிரமாணம்.

(5) **அருத்தாபத்திப்பிரமாணம்.**—பகலுண்ணாது நான் உபவாசி என்பவன் தேகம் பருத்திருப்பதைக்கண்டு, அவன் இரகசியமாக இரவில் உண்கிறான் என்றறிவது போன்றதே அருத்தாபத்திப் பிரமாணமாம்.

எஃதின்றி ஒன்று சம்பவியாதோ அதற்கு அந்த இன்றி யமையாத வஸ்து உபபாத்தியம் எனப்படும். பகலுண்ணானிடம் இராப்போஜனமின்றிப்பருமன்சித்தியாது. ஆதலின், அவனது பருமன் இராப்போஜனத்தின் உபபாத்தியம் எனப்படும். (இராப்போஜனத்தின் சமபாத்தியம்.)

எதனபாவத்தால் எதனபாவம் உண்டாகுமோ அதற்கு அது உபபாதகமாகும். இராப்போஜனத்தின் அபாவத்தால் பகலுண்ணானுக்குஸ்தூலத்தன்மையின் அபாவம் நேரிடும். ஆதலின், இராப்போஜனம் ஸ்தூலத்தன்மையின் உபபாதகமாம் (சம்பாதகம்). உபபாத்தியத்தின் சம்பந்த

ஞானத்தால் உபபாதகத்தைக் கற்பித்தலே அருத்தாபத்திப்பிரமாணத்தாலறிவதாகும்.

(6) அநுபலப்திப்பிரமாணம்.—இதற்கு அபாவப்பிரமாணம் என்றும் கூறுவார்கள். அபாவத்தின் உண்மை ஞானம் எதனாலுண்டாகிறதோ அதற்கு அநுபலப்தி அல்லது அபாவப்பிரமாணம் என்று பெயர். "இங்கு புத்தகம் இல்லை" என்றபோது புத்தகம் புலப்படாமையே அவ் வாக்கியம் உண்மை யென்பதை யறிவிக்கிறது. அதுவே அநுபலப்திப் பிரமாணம்.

(7) ஐதீகப் பிரமாணம்.—காலாந்தரமாக யாவரும் கூறிக்கொண்டிருப்பதைக் கொண்டு ஒன்றை யுண்மையென அறிவது. அது "இம் மரத்தில் பேயிருக்கிறது" என்பது போன்றதாம்.

(8) ஆகமப் பிரமாணம்.—சாத்திரங்களில் கூறியுள்ளவற்றை நம்புதல்.

உபமான வஸ்துவையும், உபமேய வஸ்துவையும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலேயே காண்கிறோம். அதாவது, உபமானப் பிரமாணத்திற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணமே யாதாரமாயிருப்பதால் உபமானப் பிரமாணத்தைப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தில் சேர்த்தும், ஆகமப் பிரமாணமும் நம்பத்தக்க ஒருவரால் கூறப்பட்டதால் அதைச் சப்தப் பிரமாணத்தில் சேர்த்தும் ஆறு பிரமாணங்களென்றே கூறுவது முண்டு.

பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம் என்று மூன்று பிரமாணங்களுக்கும் பிரம்மம் விஷயமாகாது. எல்வாறெனின்,

பிரம்மம் நாமரூபமற்றது; ஆதலால் கட்புலனுக்குப் புலப்படாது. பஞ்சபூதங்கள் முதலியவற்றைச் சேர்ந்ததுமல்ல. ஆதலால் இந்திரியங்களாலும் அறியமுடியாதது. ஆகையால் பிரம்மம் பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு விஷயமன்றாம்.

பிரம்மத்திற்கு புகையைப்போல் பிரத்தியக்ஷமாக இந்திரியங்களின் உதவியாலறியத்தக்க குறிகுண முதலிய ஒன்றுமில்லை. அக்கினியினின்று புகையுண்டாவதுபோல் பிரம்மத்தினிடமாக ஒன்றும் உண்டாவதுமில்லை. ஆகையால் பிரம்மம் அநுமானப் பிரமாணத்திற்கும் விஷயமாகாது.

இனி உபமானப் பிரமாணத்தில், அறியவேண்டிய வஸ்துவைப் போன்ற வேறொருவஸ்து வேண்டும். பிரம்மத்தைப்போன்ற வேறொரு வஸ்து எதுவுமில்லை.பிரம்மம் சுஜாதி விஜாதி சுவகத பேதமற்றது என்று சுருதி கூறுகிறது. மரத்திற்கு மரம் சுஜாதி, மரத்திற்கு கல்வி விஜாதி, மரத்திற்கு பூ, பிஞ்சு, காய், கனி, சுவகதம். பிரம்மத்தினிடத்தில் இத்தகைய பேதங்களொன்றுமில்லை. ஆகையால் பிரம்மம் உபமானப் பிரமாணத்திற்கும் விஷயமாகாது.

பிரம்மம் ஆகமப் பிரமாணத்திற்கும் எட்டாது. ஏனெனில், அப்ப மூர்த்திகள் கூறியதுபோல் அவனை இவ்வண்ணன், இவ்வுருவன், இந்நிறத்தன், இத்தன்மையன், இவ்விடத்தன் என்று எழுதிக்காட்ட முடியாது.

இனி வாக்குக் கெட்டாது என்றுரைத்த வேதம் பிறகு வாக்குக் கெட்டும் என்று கூறியதே, இந்த இரண்டில் எது பிரமாணம் என்று கேட்பாயாயின் கூறுதும். இந்த இரண்டு வாக்கியங்களும் மெய்யே. வேதங்கள் ஒருபோதும் அசத்தியங்கூறா. சுருதிக்கும் எட்டும் என்றது எவ்வாறெனின், வேதம் கூறாமற் கூறிற்று. எவ்வாறெனின்,

ஒரு ஸ்திரீயானவள் அவளது கணவனல்லாத மற்றவர்களை ஒவ்வொருவராகக் காட்டி, "இவன் உன் கணவனா? இவன் உன் கணவனா?" என்று கேட்டால் "இவனல்ல, இவனல்ல" என்கிறாள். கடைசியில் தன் கணவனைக் காட்டும்போது நாணமடைந்து மௌனமாய்த் தலை குனிந்து கொள்கிறாள். அப்போது அவள் இவர் என் கணவர் என்று வாயாற் கூறாவிடினும், நாணத்தோடு தலை குனிந்துகொண்ட மௌனத்தால் இவன் என் கணவன் என்று கூறாமற் கூறிவிடுகிறாள். இது போன்றே வேதமும், அநர்த சடதுக்கமாகிய தத்துவங்களை யெல்லாம் இது நீயன்று இது நித்தியமும் சித்தும் ஆனந்தமுமானதல்ல. ஓர் காலத்திலிருந்து ஓர் காலத்தி லில்லாது போவதால் நித்தியமல்ல அநித்தியம்; இது உன்னாலறியப்படுகிறது, உன்னையது அறியாது ஆகையால்சித்தல்ல சடம், துக்கமுடைய தாகையால் ஆனந்த முடைய தல்ல. ஆகையால் இது நீயன்று; இது நீ யன்று என்று யாவற்றையும் கழித்துக்கொண்டே போய், முடிவில் நீக்கப்படாததாய் எஞ்சியிருக்கும் பிரம்மசொரூபத்தை மௌனமாகக் கூறாமற் கூறும்.

இதனால் பிரம்மம் வாக்குக் கெட்டும் என்று கூறப்பட்டது.

(தொடரும்) சீடன்.

---

## தன்வினை தன்னைச் சுடும்

தவராஜ கோளரியாகிய பட்டினத்தடிகள் பைத்தியங் கொண்டவரென, அடிகள் தமக்கை அவமானம்பொறாது, 'இவனிவ்வாறிருப்பதினும் இறப்பதே நலம்' எனக் கருதி, விடங்கலந்த அப்பமொன்றைச் சுட்டு அவரிட மருந்தவளித்தலும், அம்மகான் அதனை "தன்வினை தன்னைச் சுடும், ஓட்டப்பம் வீட்டைச் சுடும்," என்று அவ்வில்லிறப்பிற் செருக, அது எவ்வாறணைப்பினு மணையாது அவ்வீட்டை எரித்தழித்தது. 'தன்வினை தன்னைச் சுடும், என்பது சத்தியமானால் இவ்வப்பம் இவ்வீட்டைச்சுடும், என்பது அவர் கருத்து. அது சத்திய மொழியாகலின் அங்ஙனமே நிகழ்ந்தது.

வினை யெனுஞ் சொல் நல்வினை தீவினை யிரண்டிற்கும் பொது வாயினும், ஈண்டுச்சுடும் என்ற விதப்பால் தீவினையைக் குறிக்கின்றது. தீவினை யென்பது தீமையைத் தரத்தக்க தொழிலென்றும், தீப்போன்ற கொடிய செய்கை யென்றேனும் பொருள்படும். எங்ஙனஞ் சொல்லினும் தீமை பயக்கும் கொடியதொழில் என்பதே தேர்ந்த பொருளாவது. வினைகளின் பயனே பிறவிக்குக் காரணம். வினை யொழிந்தால் பிறவியொழிந்தது. "வினைப்போகமே யொரு தேகங்கண்டாய், வினைதானொழிந்தால் தினைப்போதளவும் நில்லாதுகண்டாய்" நல்வினையால் புண்ணியமும்

தீவினையால் பாபமுமுண்டாம். மனிதர் புண்ணியத்தின் பயனாய் இன்பமும், தீவினையின் பயனால் துன்பமும் துய்ப்பர். "வினைவிதைப்பவன் வினையறுப்பான், தினைவிதைப்பவன் தினையறுப்பான்."

மனம், வாக்கு, காயம் எனு முக்காரணங்களில் ஆதியே ஆதிகாரணம். மனத்தின் வினைவே வினையா நிகழும். சில சமயங்களில் மனம் நன்மை நினைக்கத் தீமையாக முடிவதுமுண்டு. அது தீவினையாகாது. அதைச் செய்தவன் பாபம் பெறான். செய்யவேணடும் என மனத்தின் தொழிலாகிய நினைவுதோன்ற அதன்படி புரியும் வினையே பாபத்தைப் பயக்கும் தீவினையாகும். மனந் தீயதாயின் தொழில் தீயது. நல்ல எண்ணங்கள் அதினின்றுந் தோன்றுவதில்லை. தீயஎண்ணங்களும், தீயவார்த்தைகளும், தீயசெய்கைகளும், தீயமனத்தினின்றே யுதிக்கின்றன. "விதையொன்று விதைக்கச் சுரையொன்று காய்க்காது" என்பதுபோல், மனத்தியல்பு போன்றே செய்வினையு முண்டாகும். இதனால் அனைத்திற்கும் காரணம் மனமே யென்றுணரலாகும். இது பற்றியே "அனைத்துலகு மடக்கியாள முயல்வதினும், மனத்தை யடக்க முயல்வதே சிறப்புடைத்து" என்றனர் ஆன்றோர். 'கொள்ளித்தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க் குரங்காய்த் துள்ளுங் கள்ளமனம்' போன போக்கெல்லாம் போகலாகாது. தானே எஜமானனென்றுணராது ஊழியனுக்கடங்கி யிருப்பாரொப்ப வதனுக் கடங்கியொழுகுவோர், "கோபம் வராதபடி அய்பியசித்தாலும் அட்டமா சித்திகளை யடைந்தாலும் யாதொரு பயனுமடையார்," எனக் கூறிய மகானின் மாற்றம் மருந்தினு மாண்புடையதன்றோ?

"சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்,
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" (தாயுமானார்)

அஃது அசாத்தியமும் சுலப சாத்தியமுமன்று. கஷ்ட சாத்தியம். மனம் சுயேச்சையாய்த் திரியும் பட்டி மாட்டிற் கொப்பாகியதாகலின் அதை நாளாவட்டத்திற்றிருப்பப் பழக்கவேண்டும். "காடுங் கரையு மனக்குரங்கு கால் விட்டோட வதன்பிறகே யோடுந்தொழிலாற் பயனுளதோ"*

அடக்கப்படாத தீயமனத்தாலாம் வினைகளே தீவினைகள். அனுபவிக்கப்பட்டனவும், இப்போது அனுபவிக்கப்படுகின்றனவும், இனி அனுபவிக்க வேண்டியனவுமாகிய துன்பங்கட்கெல்லாம் முற்பவத்திலாக்கிய வினைகளே காரணமாகும். இம்மையி லியற்றுவன யாவும் மறுமையின் மூட்டைகள். இம்மையில் நாம் துய்ப்பனவற்றால் கடந்த பிறவியின் காரியங்களையும், மறுஜன்மாவில் அடையவேண்டிய பலனை இம்மைச் செயல்களாலு முணரலாமென்பது ஆன்றோர் கொள்கை.

"இறந்த பிறப்பிற்றான் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக.—பிறந்திருந்து
செய்யும் வினையா லறிக வினிப்பிறந்
தெய்தும் வினையின் பயன்." (நீதிச் செய்யுள்)

---

* இதன் விவரங்களை "ஆனந்தபோதினி" முதற்றொகுதியிலுள்ள மனமென்னும் வியாசத்தாலுணர்க.

நான்கு அஸ்வங்கள் பூட்டிய அழகிய இரதத்திலேறிச் செல்லும் இரண்டு சீமான்களினிடையில் ஒரு நாய் பட்டு மெத்தைமேல் படுத்துக் கொண்டு அவர்கள் அன்போடூட்டும் இனிய பாற்கட்டியை யருந்துகிறது. அதே காலத்தில் வயிறு முதுகில் ஒட்டிக்கொண்டு பசியால் வருந்தி வீதியி லெறியப்பட்டிருக்கும் எச்சில் இலையிலுள்ள இரண்டொரு அன்னத்தை நக்கும் ஒரு நாயைச் சில சிறுவர்கள் கற்களால் புடைத்து அதன் கால் காயமடையும்படிச் செய்கின்றனர். இந்த இரண்டு நாய்களும் ஒரு தாயின் வயிற்றிற் பிறந்தனவே. அப்படி யிருந்தும் ஒன்று உயர்ந்த சுகத்திலும், மற்றொன்று பரிதாபமான இம்சையிலுமிருப்பானேன். ஒருவன் ஒட்டன் வயிற்றிற் பிறந்து மண்வெட்டுகிறான்; அவன் சகோதரன் குத்தகைக்கு வேலை யெடுத்து ஆட்களைக்கொண்டு வேலைகளைமுடித்துச் செல்வமும், கௌரவமு முடையவனாக விருக்கிறான். இந்த வித்தியாசங்கட்கோர் காரணமிருத்தல் வேண்டுமன்றோ? ஆம் இருக்கிறது. காரணமின்றிக் காரியம் நிகழாது. அவைமுன் புரிந்த வினைகளே. சாயநுக்ரக சக்திவாய்ந்த மாண்டவியர் கழுவேற்றப்பட்டுக் கடுந்துன்பமடைந்து ஆணி மாண்டவியர் எனப் பெயர் பெற்றதும், தும்பியினுடலில் முள்ளைச் செருகி வருத்திய தீவினையாலேயே யல்லவா? அநுமானிட்ட ஆக்கினையோ இலங்காநகரை யெரித்தது. பிறர்மனை நயந்த தசக்ரீவன் வினையே சுட்டது. அடாது செய்தவர் படாதுபடுவ தடைவேயன்றோ? மடியில் நெருப்பைக்கட்டிக் கொண்டவன் வெந்தொழிவது நிச்சயம். நன்மையோ, தீமையோ உழுந்துருள்போதின் முற்பகுதியில் செய்தால் பிற்பகுதியில் அனுபவித்தே தீரவேண்டும். ஒழிக்கு முபாயமுண்டோ. வினைப்பயனை வெல்வதற்கு வேதமுதலாம் எனைத்தாய நுலகத்துமில்லை. சுயோதனன் வீமனால் ஊருமுறிந்து வீழ்ந்து குற்றுயிராக்கிடக்கையில்,

“ஆற்றி னீர்வினை யாடிய நாண்முதல்
காற்றின் மைந்தனொ டெத்தனை கன்றினேன்
சாற்றி “னேன்வினை தானெனையே சுடக்”
கூற்றின்வாய்புகுந் தேற்கென்ன கூற்றையா.(வில்லிபாரதம்)

என வருந்தினன். யாது பயன்? அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வருமா? அவன் வினையே அவனைச் சுட்டது.

எரியினும் நஞ்சினும் தீமையை அஞ்சவேண்டும். அச்சம் என்பது இதற்கென்றே யேற்பட்டது. வேறொரு காலத்தும், வேறோரிடத்தும், வேறோருடம்பினும் போய்ச் சுடுதல் தீவினையேயன்றி, தீயன்று. “பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாபமுமே.”

‘தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.’... ........ ...........(குறள்)

கோபமோ, பொறாமையோ, பேராசையோ பிடர் பிடித்துந்தப் பிறர்க்கு ஆற்றும் கிருத்தியங்களியாவும் மற்றவர்க்காகவல்ல. தன் பொருட்டே, தான் கெடவே. கேடுநினைப்பான் கெடுவான். பிறனைத் தள்ளிப் புதைக்க வெட்டிய குழியில் தானே விழுவது நிச்சயம். அச்சமயம் தப்பினாலும் மற்றொரு சமயம் தப்பாது. ஆகலின், பாவத்திற்குப் பயந்து நல்வினை புரிவ தத்தியாவசியமாமாறு விளங்கும். பாபகாரியங்களின்னவை யென்

பதுவும், புண்ணிய காரியங்களின்னவை யென்பதுவும் யாவர்க்குந் தெரியுமாயினும் சில முக்கியமாயுள்ளவற்றை யீண்டு விரிப்பாம்:

பரிவு மிடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை யஞ்சுமின், புறஞ் சொல் போற்றுமின்
ஊனூண் துறமின், உயிர்க்கொலை நீங்குமின்

தானஞ் செய்மின், தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின், தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின், பொருள்மொழி நீங்கன்மின்
அறவோ ரவைக்களம் அகலா தணுகுமின்

பிறவோ ரவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின், பிழையுயி ரோம்புமின்
அறம்மனை காமின், அல்லவை கடிமின்
கள்ளுங் களவும், காமமும் பொய்யும்

வெள்ளைக் கோட்டியும் விரகினி லொழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையு நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீர்!.........(சிலப்பதிகாரம்)

நன்மைக் கடைப்பிடி.
தீவினை யகற்று. (தொடரும்.)

பூ. ஸ்ரீனிவாசன்,
தமிழ்ப் பண்டிதர், ராணிப்பேட்டை.

---

## ஆத்திசூடி

இது ஒரு சிறு நூல். இதன் ஆசிரியர் ஔவை. இந்நூல் சுருங்கச் சொல்லல் விளங்கவைத்த லென்னும் அழகிலடங்கும். இது மாணவர்களுக்கு ஆரம்ப நூலாய் வாசிக்க அதியுபயோகமாகின்றது. இதிலுள்ள ஒவ்வொரு, வாக்கியமும் "நீ" என்னும்முன்னிலை யொருமைப்பெயரைத் தோன்றா வெழுவாயாகக் கொண்டமைக்கப்பட்டுள்ளது. அநேகமாக வாக்கியங்களெல்லாம் ஏவல் வினையைக்கொண்டனவாக வொளிர்கின்றன. இதில் ஒவ்வொரு வாக்கியமும் ஆழ்ந்த கருத்தும், சொல்லழகும், பொருட்சுவையும் உடையனவாய் விளங்குகின்றன. மாணவர்கள் இவ்வாக்கியங்களைச் சிரமமில்லாமல் மனனம் பண்ணுவதற்காக அகர முதற்கொண்டு ஔகாரம் வரையில் வரிசைக் கிரமமாக எதுகை நோக்கி யமைக்கப்பட்டுள்ளன. இவ்வாக்கியங்கள் பெரிய நூற்களிலுள்ள சிறந்த கருத்துக்களின் திரண்ட பொருளாக ஜ்வலிக்கின்றன. ஒவ்வொரு வாக்கியத்திற்கும் எத்தனை கோடிப் பொருட்கள் கொடுத்தாலுமீடாக மாட்டாது. அவ்வளவு மேன்மையிற் சிறந்தவை இவ்வாக்கியங்கள். ஒவ்வொருவருடைய கருத்திலும் நின்று, அவர்களைத் தீ நெறிக்கட் செலுத்தா

மற்றடுத்துப் பாதுகாக்கும் வன்மையுமுடையன இவை. இவ்வாக்கியங்கள் மாணவர்களை மாத்திரம் நோக்கிக் கூறியதாக நாம் எண்ணல்கூடாது; எல்லோரையும் நோக்கிக் கூறியதாகக்கொள்ளல் வேண்டும். ஏனெனில், இந்த ஆத்திசூடியின் அறியவாக்கியங்களைச் சமயத்தில் உபயோகப்படுத்திச் சம்பாஷணையை யலங்கரிப்பதாலேயேதான் இவ்வாக்கியங்களைப் பிரதிதினமும் நினையாதாருமில்லை. இவ்வாக்கியங்களைக் கற்றோர்களெல்லோரும் பிரதி ஞான்றும் சம்பாஷிக்கும் வேளைகளில் உபயோகப்படுத்தாமலிருக்கவுமில்லை. இவைகளைச் சிறந்தனவாகக் கொண்டு உபன்னியாசங்கள் செய்யாத மனிதர்களுண்டோ? இல்லை. ஆத்திசூடிப்பாடம் நடவாத தமிழ்ப் பாடசாலைகள்தான் உண்டோ? இல்லை. ஆத்திசூடியை யுபயோகப்படுத்தாத தமிழ் உபாத்தியாயர்களும் மாணவர்களும் இல்லை. பால்யத்தில் மாணவர்கள் இவ்வாக்கியங்களின் கருத்துக்களை யுணராமல் மனனம் செய்தாலும் அவர்களுக்குத் தகுந்த வயது வரும்போது ஆத்திசூடி வாக்கியங்களின் அரிய கருத்துக்களை யுணர்ந்து கொள்வர். அப்பொழுது அவர்களறிவு இவ்வாக்கியங்களை யாராய்ந்து பார்ப்பதை நோக்கின் இவ்வாக்கியங்களின் மேன்மை தெளிவாகும்.

இவ்வாக்கியங்களைக் கற்றறிந்தோர்கள் வரையும் வியாசங்களுக்குத் தலைப்பாகவும் மேற்கோளாகவும் கொள்ளாமலிருக்கவில்லை. கற்றோர்கள் வெளியாக்கும் நூல்களிலும் இவ்வாத்திசூடி வாக்கியங்களைப் பிரயோகிக்காமலிருக்கவில்லை. இவ்வாத்திசூடி வாக்கியங்களைக் கொண்டே கற்றோர்கள் ஆத்திசூடிப் புராணம், ஆத்திசூடிவெண்பா, ஆத்திசூடி விருத்தியுரை, ஆத்திசூடி நீதிக்கதைகள், ஆத்திசூடி வியாசங்கள், ஆத்திசூடியுரை முதலான புத்தகங்களை ஏற்படுத்தி யுள்ளார்கள். இந்த ஆத்திசூடியில் கூறிய ஒவ்வொரு வாக்கியமும் அமைக்க வேண்டிய விதத்தில் அமைத்திருப்பதை நோக்க ஔவையாருடைய புலமைத்தனம் நமக்குத் தெளிவுறும். உதாரணமாக,நாம் விரும்பவேண்டியவைகளை "அறஞ்செயவிரும்பு," "தானமது விரும்பு,""வித்தைவிரும்பு" என்றுவிரும்பவேண்டியமுறையில் அமைத்துள்ளார். ஒவ்வொருவரும் தங்கள்பா லெழுங் கடுங் கோபத்தை யடக்குதல் மிக்க அரிதென்பதையுணர்ந்தே ஔவையார், "சினம் ஆறுவதென்று" கூறாமல் "ஆறுவது சினம்" என்றார். ஒவ்வொருவரும் தருமஞ் செய்வது மிக்க அருமை யென்பதைத்தெரிந்து "இயல்வது கரவேல்" என்ற முறையில் ஒவ்வொருவரும் தங்களிடம் உள்ளதையேனும் பிறருக் கொளிக்காமல் கொடுத்தாற்போதும் என்ற கருத்துடன் நவின்றுள்ளார். நாம் விரும்பக் கூடாதவைகளைக் "கொள்ளைவிரும்பேல்," "சூதுவிரும்பேல்," "மீதூண்விரும்பேல்" என்று தீமையைப் பயக்கக் கூடியவைகளை விரும்பவேண்டா மென்றனர். நாம் அறவே ஒழிக்கவேண்டியவைகளைக் "கெடுப்பதொழி,""கோதாட்டொழி" என்றனர். நாம் எப்போதுங் கைக்கொண் டிருக்கவேண்டியவைகளைக் "குணமது கைவிடேல்," "ஊக்கமது கைவிடேல்" என்றனர். நமக்கு நேருந்துன்பங்கள் அநேகமாய் நம் வாயினின்றும் வெளியாகும் வார்த்தைகளாலேயே யாதலின் "வெட்டெனப் பேசேல்," "வல்லமைப்பேசேல்," "நொய்யவுரையேல்," சுளிக்கச்சொல்லேல்," "மிகைபடச்சொல்லேல்,""கண்டொன்று சொல்லேல்," "பிழைபடச்சொல்லேல்"என்பன போன்ற பல வாக்கியங்களையும் அடுத்தடுத்துக்

கூறியுளார். நாம் மற்றவைகட்கு இடங்கொடுத்தால் நமக்கே துன்பம் வருமென்பதை யுரைத்த "துன்பத்திற்கிடங்கொடேல்," "நோய்க்கிடங்கொடேல்," "மாற்ருனுக்கிடங்கோடேல்" என்றுரைத்தனர். நம்மைக் கெடுத்தழிப்பவைகளைத் "தீவினையகற்று," "பேதைமையகற்று," "கீழ்மையகற்று" என்ற மொழிகளால் சாற்றி யவைகளை யகற்றக் கூறினர். நாம் செய்யவேண்டியவைகளைச் செய்யவேண்டுமென்று"பருவத்தேபயிர்செய்" "செய்வனதிருந்தச்செய்,""திருமாலுக்கடிமை செய்,""தூக்கிவினைசெய்" என்றும் செய்யக்கூடாதவைகளை "இயல்பலாதன செயேல்," "அழகலாதனசெயேல்,' '"வேண்டிவினை செயேல்" என்றும் அவைகளைச் செய்யவேண்டாமென்றும் மொழிந்தனர்.

நாம் அக்கினி சாட்சியாக மணந்த நம் மனைவியையே சேரவேண்டுமென்பதையும், அதனால் மேலான சந்ததிகள் உண்டாகு மென்பதையும், சதிபதிகளுக்குள் மனவேற்றுமை யேற்படலாகா தென்பதையுங் கருதியே, "மெல்லினல்லா டோள்சேர்" என்றனர். தங்களிடம் வருவோர்கள் எவ்வளவு தேஜஸ் உடையவர்களாக விருந்தாலும், தனவந்தர்களாகவும், பலமுள்ளவர்களாகவும், வியாதி யில்லாதவர்களாகவும் இருந்தாலும் இவற்றையெல்லாங் கெடுத்து வேசிகள்துன்பத்தைத் தருங்கொடிய வியாதியையே ஈவார்களாகலின் "மைவிழியார் மனையகல்" என்று அவர்களுடைய வீட்டை நாடாதகலச் சொற்றனர். நாம் எப்படி வாழ்ந்தால் உலகத்தில் நல்லதென்பதை வெளிப்படுத்த "புகழ்ந்தாரைப் போற்றிவாழ்," "பொருடனைப் போற்றிவாழ்," "கிழமைப் படவாழ்,""தேசத்தோடொத்துவாழ்," "ஊருடன்கூடிவாழ்" என்று விளம்பினர். நாம் வேலைசெய்வதற்குச் சோம்புவோமானல் துன்பமுண்டாகு மென்பதை " சோம்பித்திரியேல்," " ஏற்பதிகழ்ச்சி," "சையெனத்திரியேல் " என்பவைகளாற்றெளிவித்தனர். நாம் இன்னொருடன் சேர்ந்தாற் றுன்பமுண்டாகு மென்பதைத் தெரிவிக்கவே " பையலோ டிணங்கேல்," " மூர்க்கரோ டிணங்கேல்," "ஒன்னுரைச்சேரேல்," என்றுரைத்தனர். நாம் எப்போதும் நல்லவைகளை மறக்கலாகா தென்பதை"அறனைமறவேல்,""நன்றிமறவேல்," "சீர்மை மறவேல்," "தொன்மை மறவேல்" என்பவைகளைச் சாற்றி விளக்கினர். நாம் மேலானவைகளை யிகழ்தல் கூடாதென்பதை"எண்ணெழுத் திகழேல்,""தெய்வ மிகழேல்"என்று உரைத்தனர். இன்னும் இவைகளைப்போலவே மற்றவாக்கியங்களையும் அமைத்துள்ளா ரென்பது அறிஞர்களறியாததல்ல. அறிஞர்கள் இவ்வாக்கியங்களுக்குப் பொருள் பலவிதமாகக் கூறும விருக்கவில்லை.

நம் தாய்நாட்டின் க்ஷேமத்தைக் கருதி இத்தகைய பேருதவிசெய்த ஔவைப் பிராட்டிக்கு நாம் செய்யவேண்டிய நன்றியாவது, அவர் திருவாய் மலர்ந்த வாக்கியங்களை ஆரம்பத்திலேயே நம்மக்களுக்குக் கட்டாயம் போதித்து நாமும் அவ்வழி நின்றொழுகலே யாகும்.

M. மாணிக்க நாயகர்.

கூனிச்சம்பட்டு, புதுவை.

# இல்லறம்—கிரகணகாலபலன்

(144-ம் பக்கத்தொடர்ச்சி)

அன்றியும் அறிவொன்றனையே பிரதானமாகக் கொண்டொழுகுவோர்க்கு அதிக சீக்கிரத்தில் கெடுதியைச் செய்யும். ஏனெனில் அவர்களுக்குச் சரீரபுஷ்டியையும் வீரத்தையும் விருத்தியாக்கும் பதார்த்தங்கள் விலக்கப்பட்டன. அறிவை மாத்திரம் விளக்கக்கூடியவையும், சீக்கிரத்தில் சீரணமாகக்கூடியவையுமான பதார்த்தங்களே போசனத்துக்கு விதிக்கப்பட்டன. உபவாசங்களும் அதிகமாக விதிக்கப்பட்டன. கிருஷ்ண சுவேத சதுர்த்தசி, திரயோதசி, ஏகாதசி, அஷ்டமி, மாதப்பிறப்பு இந் நாட்களில் ஒரேவேளை புசிக்கவேண்டுமென்கிற விதியுளது. இவ் விதியைக் கைக்கொண் டொழுகுபவரே வைதிகராவார். பக்தி மார்க்கத்தில் நிற்பவரும், உபாசனநெறியில் நிற்போரும், யோகநிலையில் கூடியுள்ளவரும் எப்பொழுதும் ஒருபோதே புசிக்கவேண்டும். இவர்களுக்குக் கிரகணகால போஜனம் பெருந்தீமையை விளைக்குமென்பதி லையமே யில்லை. உடனே தெரியா விட்டாலும் நாளடைவில் தெரியும். பிதிர்க்களை யுத்தேசித்துத் தர்ப்பணம் செய்பவர் அநேகருளராதலால் அவர்கள் கிரகணந்தொடுவதற்கு மூன்று ஜாமங்களுக்கு முன்னரே புசித்துவிடவேண்டும். புசித்த உணவுமுற்றும் ஜீரணிக்க அவ்வளவு நேரம் செல்லுமென்று வைத்திய நூல்கள் கூறுகின்றன. சில பதார்த்தங்கள் ஜீரணமாக ஐந்து ஜாமங்கள் செல்லுமென்று கூறுகின்றன. பசியைத் தாங்கமுடியாத பாலர், விருத்தர், நோயாளிகள் இவர்கள் கிரகணந்தொடுவதற்கு ஒரு ஜாமத்துக்கு முன் சீக்கிரம் ஜீரணமாகக் கூடிய கஞ்சி முதலிய புசிக்கலாமென்றுங் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு கிரகணகால போஜனம் மெலிந்த சரீரமுடையவர்களுக்கே யன்றிச் சரீர வலிமை யுடையார்க்கும் ஜீரண பலமுடையார்க்கும் அநாவசியமாமென்று சிலர் கூறுவர். இது அசங்கதமென்க. ஈண்டு கிரகணகால வேறுபாட்டாற் கூறியதேயன்றிச் சரீரவன்மை மேன்மை பற்றியன்று. யாம் அவ்வாறு கூறியது மென்மைத் தன்மை யுடையார்க்குத் தீமைசீக்கிரத்தில் வெளிப்படுமென்றும் ஏனையர்க்குக் காலாந்தரத்தில் தீமை விளைக்குமென்பதும் விளக்குதற்கே. ஆதலால் ஒவ்வொருவரு மிவ் விதியை யனுசரிக்க வேண்டுவ தவசியம்.

திருக்குறளில் "மருந்து" என்னும் அத்தியாயத்தில் "அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல துய்க்க துவரப் பசித்து" என்ற செய்யுளுரையில் "துவரப்பசித்து" என்றதன் விசேஷ வுரையில், "உண்டது அற்றாலும் அதன் இரதம் அறாது ஆகலான் அதுவு மறல் வேண்டுமென்பார் மிகப்பசித்து என்றார்" என்றும், "மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய தற்றது போற்றியுணின்" என்ற செய்யுளில் "அற்றது போற்றி" என்றதனுரையில் அற்றது போற்றலாவது குறிகளாற் சீரணித்ததை யறிந்து எனவும், குறிகளாவன: யாக்கை நொய்மை, தேக்கின் (ஏப்பம்) தூய்மை, கரணங்கள் தொழிற் குரியவாதல், பசி மிகுதல் எனவு மோதினர் பரிமேலழகியார். இவற்றாற் புசித்த பதார்த்தங்கள் அற்றாலும் அதன் இரதம் ஜீரணமாவது கடினமெனவும், அதுவும் ஜீரணமானாலே மிகப்பசிக்கும் எனவும் விளக்கப்பட்ட

மையால் பசியுண்டான மாத்திரத்தாலேயே யாவும் ஜீரணமாயிற்றென்று கருதுவது கூடாது. அப்பதார்த்தங்களின் இரதமும மறவேண்டும். அதனை யுணர்தல் எல்லார்க்கு மெளிதன்று. இக்காரணம்பற்றியே பகலிற்பதினைந்து நாழிகை யளவிலும், இரவில் ஜாமத்துக்குள்ளுமான நீடித்த காலத்தை ஸ்மிருதிகளும் விதித்தன. இரவிலுண்டது சீக்கிரம் ஜீரணமாதலால் ஐந்து ஆறுஜாமங்களிடையிட்டும்,பகலில் சூரியவெப்பத்தால் ஜீரணமாகக் கூடுமாதலால் நாலு ஜாமமிடையிட்டும் இரண்டுவேளை போஜனமே செய்யத்தக்கதென்றும் நூல்களிற் கூறப்பட்டது. இரதமும் நன்றாயறாக்கால் அது வாதபித்த சேத்துமங்களுடன் கூடிப்பலவகையான நோயாகச் செய்யுமென்பது வைத்தியப் பெரியார் அநுபவத்திற் கண்டறிந்தது. ஆதலால் கிரகணகால போஜனவிதி கட்டாயமானதென்று கொள்ளத்தக்கது.

இந்தக் கிரகண காலத்தில் சகல பதார்த்தங்களும் அமிர்தமயமாமென்றுகூறினோம். அதனுள் சராசரப் பகுதிக ளிரண்டு மடங்குமாதலால் பசு, பட்சி, மானிடர்களும் அமிர்தத் தன்மையை யடைவார்கள். இயற்கையிலேயே அமிர்தத் தன்மை யமைந்திருக்குந்தண்ணீருக்கு அதிகமாம். ஆதலால், கிரகணந் தொட்டவுடன் சுத்த நீரில் ஸ்நானஞ் செய்வது அவசியமாயிற்று. விடுகிற பரியந்தம் மந்திரங்களைத் தியானித்துக்கொண்டிருக்கவேண்டும். தியானித்தால் நாதவடிவமான மந்திரம் அதிகமான சித்தியைக் கொடுக்கும் ஒரு ஆவர்த்தி அனந்த மாகுமென்று பெரியோர் கூறுவர். இதனை விடமந்திரங்களினாலே காணலாம். பாம்பு, தேள் முதலிய விடங்களைத் தீர்த்தற் குரிய மந்திரங்களை ஜபித்தால் அதிக பலிதம் உண்டாகும். நீரில் நின்றுகொண்டு ஜபித்தால் அதிலும் அதிக பலிதம். கழுத்தளவு நீரில்நின்று ஜபித்தால் இன்னும் மிகும். தண்ணீருக்குள் முழுகிக்கொண்டே ஜபிக்கும் புண்ணியவான்களு முண்டு. அவர்களுக் குண்டாம் பலன் சொல்லியடங்காது. இவர்கள் கையால் தொட்டவளவில் விஷங்களெல்லாம் பறந்துவிடும். இங்ஙனம் செய்வதற்கு மனத்தூய்மை அதிகம் வேண்டு மென்பதைக் கவனிக்கவேண்டும். மனத்தூய்மையோடு தண்ணீரில் நின்று ஜபிக்கும்போது பூமிக்கு மேலும், மதி கதிர்களுக்குக் கீழும் நிறைந்திருக்கும் அமிர்தத்தினால் சரீரந் தூய்மையாய் அமிர்த மயமா மாதலால் மந்திரசித்தி யுடனே யுண்டாகும். இது நமது தேசவாசிகளான ஜனங்கள் எளிதிற் கண்டுகொள்ள வேண்டுமென்பது பற்றி மீண்டுச் சிறிது கூறப்பட்டது.

அமிர்தமய சரீர முடையவர்கள் தேவரென்று கருதப்படுதலால் கொடுப்பானுங் கொள்வானும் தேவர்களை யொப்பாவார்கள். சர்வ தேவமயமான வேதங்களைச் சதா ஓதிக்கொண்டேயிருக்கிற சன்மார்க்கர்களுக்குக் கொடுக்கப்படுகிற தானம் ஒன்று அனந்தமாகப் பலன்தரும். கொடுக்கிறவன் பரிசுத்தனாய் மனத்தூய்மையுடன் களங்கமின்றிக் கொடுப்பானாகில் அவன் தேகாந்தத்தில் திவ்விய சரீரம் பெற்றுத் தேவர்களுடன் வாழ்வான் என்பதில் தடையில்லை. பலனைக் கருதாமற் கொடுத்தால் அவன் மோட்ச நெறியை அடைவானென்பது திண்ணம். காய், கனி, தானியம், சொர்ணம், வஸ்திரம், பசு முதலியவெல்லாம் தானம் செய்யலாம். பூதானம், கன்னிகாதானம் செய்வதுமுண்டு. இவை யெல்லாம் அனந்த பலனைத் தருமென்பர்.

இது முடிந்தபின் தேவாலயங்களிற் சென்று தேவாராதனை செய்து தரிசித்து ஏழைகளுக்கு மன்னமிட்டுத் தாமும் புசிக்கவேண்டும். கிரகண மத்திய காலத்தில் யாகம் செய்வது கூடாது. விட்ட பின்பாகஞ் செய்வதே யுத்தமமாம். சிலர் கிரகணந் தொடுவதற்கு முன்னுலேயே பாகம் செய்துவைத்து அதில் இரண்டொரு தர்ப்பைப்புற்களையிட்டு மூடி வைத்தால் தோஷமில்லை யென்று கொள்வதுண்டு. அதுவும் அதம பட்சமேயாம். பனிக்காலத்தில் எவ்வாறு மூடிவைத்தாலும் அது குளிர்ந்து விடுவது போலவே யிதுவுமாய். ஆயின் ஜீரணிப்பது கடினப்படும். சந்திர கிரகணம் விடுவதற்குமுன் பொழுது விடிந்துவிட்டால் அன்றிரவு சந்திரனைத் தரிசித்த பின்னரே புசிக்கவேண்டும். ஏனென்றால், சூரிய கிரணங்களால் விஷத்தன்மை யெய்துமாதலால், உட்காரணங்கள் அமிர்த மயமாய் இருந்தாலும் புறக் காரணங்கள் விஷத்தன்மையை யடைந்து விடும். இரண்டு மாறுபடும் சமயமான அக்காலத்தில் விதிக்கப்படவில்லை. அமிர்த சொரூபியான சந்திரனைத் தரிசித்த பிறகே விதிக்கப்பட்டது. இவற்றை யெல்லாம் விரித்தெழுதப்புகின் நாட்கள் கழியுமாதலால் சுருக்கி யுரைத்தாம். நூல்களிற் பழகிய நுண்ணறிவுடையார் தமது புத்தி கோசரத்தால் உணர்ந்து கொள்வார்கள் என்பது கருதி, பதார்த்தகுண முணர்ந்த மேதாவிகளுக்கு அதிகங் கூறவேண்டுவதில்லை.

சூரியகிரகணமும் இது போலக்கொள்ளத்தக்கதேயானுலும் அதில் விசேஷங்களுண்டு. அதாவது, சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் சந்திரனிருந்து சூரியனை மறைப்பதினுலே சூரிய கிரகணமுண்டாகும். சூரியனைவிடப்பூமி மிகச்சிறிது. அதைவிடச் சந்திரன் சிறிது. ஆதலால் சூரியனுக்கு நேர்மத்தியில் சந்திரனிற்கும்போது சூரியனுடைய நடுப்பாக மட்டும் மறைபடும், விளிம்பின் பிரகாசம் மறைபடாது. அப்போது சூரியன் ஒரு தங்கக்காப்பைப்போலத்தோன்றும். அதைக் கங்கணக்கிரகண மென்பார்கள். பக்கங்களில் நிற்கும்போது கால் பாகம், அரைப்பாகம் மறைபடும். அதனைப் பார்சுவகிரகண மென்பார்கள். முன்பு கூறிய சந்திர கிரகணத்தில் பூமிக்கும் சந்திரனுக்கு மிடையில் சூரியகிரகண சம்பந்தமேயில்லை யாதலால் முற்றும் அமிர்த மயமாகுமென்றோம். சூரியகிரகணத்திலோ அங்ஙனமன்று. சூரியன் மேற்புறத்தும் பூமி கீழ்ப்புறத்தும் நிற்க இரண்டுக்கும் நடுவில் சந்திரனிற்கின்றது. அப்போது சூரியகிரகணங்கள் சந்திர மண்டலத்தை யூடுருவிப்பாயும். அதனுல் அமிர்தமயமான சந்திரகிரகணங்கள் சூரியகிரகணங்களின் குணத்திற் சிறிது அம்சத்துடன் கலந்து வெளிவரும். பூமிக்கும் சந்திரனுக்குமிடையில் முன்பு நிறைந்திருக்கும் அமிர்தகுணத்தோடு கலக்கும். சூரியகிரகணங்களுக்கு வலிமையில்லாத இச்சமையத்தில் சந்திராமிர்தம் சூரியகிரகணங்களால் மேலே யிழுக்கப்படாமல் அப்படியே நிற்கும். அதனுல் சூரியனுடைய குணமாகிய வெப்பம் சிறிது கலந்து பரவ, அவற்றின் கலப்பினுல் ஒரு அற்புத குணமுண்டாய்ச் சகல ஜீவாத்மாக்களையும் பரிசுத்தப்படுத்தும். சுயமான சந்திரகிரணத்தைவிட இதற்கு அதிக குணமிருப்பதினுல் சூரியகிரகணம் விசேஷித்தது என்று கூறப்படும். இது அமாவாசையில் நேர்வது அமாவாசை பிதிர்த்தேவர்களுக் குரிய சிறந்த நாள். அது பின்னுல் கூறப்படும். சந்திரகிரகணகாலத்தைப் போலவே யிதிலும் ஸ்நானம், தர்ப்ப

ணம், தானம் எல்லாம் கிரமமாகவே விதிக்கப்பட்டன. கிரகணம் விட்டபின் தேவாலயங்களில் விசேஷ ஆராதனை நடக்குமாதலால், அங்கே போய்த் தெய்வ சொரூபத்தைத் தரிசித்து, அர்ச்சனை நைவேத்தியங்கள் செய்வித்துப் பிறகு மனைக்குச்சென்று, தேவ பூசை செய்து புசிக்கவேண்டும். இப்படிச் செய்வதனால் அன்றுதினம் செய்யப்பட்ட கன்மங்களில் அறிந்தும் அறியாமலும் நேர்ந்த குறைபாடுகள் நீங்கிக் கன்மம் பூர்த்தி பெறும். செய்த கன்மங்களின் பலாபலங்களைத் தெரிந்தாருககும் தெய்வாராதனை மிகவும் சிறந்த தென்பர். இந்தக் கிரகண காலங்களில் தேவாலயத்திற் சென்று தேவனுக்குச் செய்யப்படும் ஆராதனை அநந்தமான பலனைத்தரும். கிரகணத்திற் செய்யப்படும் ஆத்மார்த்த ஆராதனை அதிக பலனைத் தரும் என்று நூல்கள் கூறுகின்றன. இவ்வாறு கிரகண விசேஷங்களை யாம் சுருக்கி யுரைத்தமையால் மேலான அறிவுடையோர் தமது பேரறிவினால் அதில் குற்றங் குறைகளைப் பூர்த்தி செய்வார்கள் என்று நம்புகிறோம். விக்கிர காராதனையாற் பயனில்லை யென்று பெரியோர்கள் கூறியிருக்க ஈண்டு விக்கிர காராதனை மஹா பலன் தருமென்று கூறியது யாங்ஙனமெனின், அது அடுத்தமுறை விக்கிர காராதனையென்னும் மகுடத்தின் கீழ்ச் சிறிது விரிக்கப்படும்.

(வரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## நம் நாட்டுக் கல்லூரிகளும் கோயில்களும்.

சகோதரர்களே! சகோதரிகளே! தற்காலத்தில் உலாவித் திரியும் அநேக பத்திரிகைகளிலும், ஆங்காங்கு தேசபக்தர்கள் செய்துகொண்டு வரும் உபந்நியாசங்களிலும், அநேகர் நம் நாட்டுப் பண்டைய காலத்து மக்களின் மேன்மைகளையும், மதத்தின் மேன்மைகளையும், உண்மைகளையும் நன்குணர்வர். நம் ஆனந்தபோதினியிலும், மற்ற பத்திரிகைகளிலும், இச்சமயம், நம் மதத்திற்கும், மாந்தர்களுக்கும் அன்னியமதஸ்தர்களால் அநேக இடையூறுகள் ஏற்பட்டு இருக்கின்றன வென்றும் நம் நாகரீகம் குறைந்து விட்டது என்றும் சீக்கிரத்தில் நம் பெருமை வாய்ந்த இந்து மதத்தையும், இந்துக்களையும், உலகத்திலில்லை என்று சொல்லும்படியாகச் செய்ய, பலமான பிரயத்தினங்கள் பார்ப்பவர்கள் பிரமிக்கும்படி செய்யப்பட்டு வருகின்றன வென்றும், அடிக்கடி கூறப்பட்டுவருகிறது. இத்தகைய, கொடிய விஷயங்களைக் கேட்போர்க்கும் வாசிப்போர்க்கும், மனதில் சஞ்சலம் எற்படுகிறது. யார்செய்தகுறையோ! நம் நாடும், மதமும் இவ்வாறு பயமுறுத்தப்படுகிறது. இத்தகைய விஷயங்களைக்கேட்டும், அறிந்தும் அதற்குத்தகுந்த நிவர்த்திகளைச் செய்யாது, இன்னும் நாம் தூக்கத்தில் இருப்பது என்ன விந்தை! தேசபக்தர்கள் மனதில் இவ்விஷயங்கள் இன்னும் குடிகொள்ள வில்லைபோலும்.

இப்போது இதைக்குறித்து நாம் செய்யவேண்டிய தென்ன? செய்ய வேண்டியவைகளைப்பற்றியோசிப்பதின் முன், நம் நாடு நாகரீகத்தில் கீழ

டைந்துக் கொண்டே வருவதற்கும், நம்மவர்கள் பிறமதத்தில் சேருவதற்கும் காரணங்களை அறிந்துகொண்டால் செய்வதைத் திருந்தச் செய்வதற்கு அநுகூலமாயிருக்கும்.

நம் நாட்டின் பிற்கால-நாகரீகம் கீழ்நோக்கிச் செல்வதற்கு முக்கிய காரணமாயிருப்பது, தற்கால வழக்கத்தி லிருக்கும், கல்விகற்கும் முறையேயாம். கல்லூரிகள், ஜனங்களின் ஒழுக்கங்களையும், நாகரீகங்களையும் சீர்திருத்துவதால், அவற்றைப் பெரிய தொழிற்சாலைகளுக்கு ஒப்பிடலாம். இளமையிற் பழக்கம் சுடுகாடுமட்டு மல்லவா? தற்காலத்தில் கல்வி கற்போரும், கற்பிப்போரும் எதற்காகக் கற்கிறார்கள்? கற்பிக்கிறார்கள்? அந்தோ! தங்கள் வயிற்றுக்கொடுமைக்கும், திரவியம் சம்பாதிப்பதற்குமே. இந்நோக்கத்துடன் இவர்கள் ஆங்கிலத்திலுள்ள சில நாடகங்களையும், கதைகளையும் பேய்களைப் போல் இராத்திரி எல்லாம் பரீக்ஷைக்கு வேண்டிய அளவுபடித்து, பரீக்ஷையில் முன்வந்து உத்தியோகஙகளில் அமர்கிறார்கள். இவ்விதப் படிப்பினால் உத்தியோகத்தைவிட்டு வேறு தொழில்களைச் செய்யமுடியாமற் போகிறது. உத்தியோகத்தில் நுழைந்தாலோ அவ்விடமும் இவர்கள் பழகுவது இவர்களைப் போலொத்தவர்க ளுடனேயாம். ஆகவே இப்போதாயினும் நாகரீகம் அடைய வழியுண்டோ ? இல்லை. "நிறையாக்குடம் நீர் தளும்பும்" என்றாற் போல் ஆங்கிலத்திலும் பூரணக்கல்வியில்லாத இவர்கள், தாங்களே பெரிய மேதாவிகள் என்றும், தாங்கள் அனுஷ்டிப்பதெல்லாம் நாகரீகம் என்றும் நினைத்து, தங்கள் நாட்டு உயர்ந்த ஆசாரங்களையும், ஒழுக்கங்களையும் கைவிட்டு விடுகிறார்கள். இந்த உத்தியோகம் வந்தது, இவர்களுக்கு ஒருபெரிய ஆட்சியே வந்தாற்போ லாகிறது. தாங்கள் தினமும் செய்ய வேண்டிய கடன்களையும் மறந்து—அவ்வாறு செய்வது தற்கால நாகரீகத்திற்குக் குறைவென்று நினைத்து—பாபத்திற் காளாகிறார்கள். முடிவில் இவர்கள் கற்றதினால் அடையும் பயன் என்ன வென்று பார்க்கும் போது அதமமாகிய சேவகாவிர்த்தியிற் பொருள் தேடுவதும், கெட்ட ஒழுக்கமும், நோக்கமுமாகவே ஏற்படுகிறது. கடவுள், பெரியோர்கள் முதலியவர்களைப் பற்றிய விஷயங்களெல்லாம் இவர்களுக்குச் சோம்பேறிகளின் பேச்சாகவே முடிகிறது. ஆதிகாலத்து நம்மவர்கள் நாகரீகமெல்லாம் ஆத்மஞானத்தை அனுசரித்ததாகவே யிருந்தது. அவர்கள் செய்யும் ஒவ்வொரு சடங்குகளுக்கும் தகுந்த சிறந்த காரணங்கள் இருந்தன. ஆனால் இக்காலத்திலோ அவைகள் எல்லாம் மறக்கப்பட்டுப் போயின. நமது கல்விச் சாலைகள், இத்தகைய கனவான்களை ஒவ்வொரு வருஷமும் ஆயிரக் கணக்காக வெளியில் அனுப்புவதால் நாகரீகம் இவ்வித இழிவான நிலைமைக்கு வந்திருக்கிறது.

இத்தகைய விபரீதங்களுக்குக் காரணம், கல்விபோதிக்கும் முறையே ஒழிய மாணவர்களின் குற்றமல்ல. கல்லூரிகளில் மாணவர்கள், ஒழுக்கங்களைச் சீர்திருத்திக்கொள்ளவும், ஆத்மஞானத்தை அடையவும், பக்தி, கடவுள் முதலிய மார்க்க விஷயங்களை உணரவும், ஏதேனும் சாதனங்கள் இருக்கின்றனவா ? இதனால் மாணவர்களை நோவதில் பயன் என்ன ? அச்சுக்குத்தகுந்த பொம்மைகளும், பொம்மைகளுக்குத் தகுந்த இலக்ஷணங்க

ளுந் தானே அமையும். ஆகையினுல் போதனு முறைகளையே முக்கியமாய் கவனிக்கவேண்டி யிருக்கிறது.

இவ்விஷய சம்பந்தமாய் முக்கியமாய்க் கலாசாலைகளுக்கு அதிகாரி களா யிருப்பவர்கள் கவனிக்க வேண்டியவைகள் பின் வருபவை என என் சிற்றறிவிற்குத் தோன்றுகிறது:—

ஆத்ம ஞானத்தைப் போதிக்கும்நம் தாய்ப் பாஷையை ஆங்கி லத்துடன் கட்டாயப் படிப்பாகவைத்து, ஒவ்வொரு மாணுக்கனும் படிக் கச் செய்யவேண்டும்.

ஒவ்வொரு வகுப்பினும், மாணுக்கர்களுக்கு, நம் நாட்டின் சிறப்பைப் பற்றியும் மதத்தின் பெருமை உண்மை முதலியவைகளைப் பற்றியும் கூறும் நூல்களைப் போதித்து, மாணுக்கர்களுக்குத் தேச பக்தியையும் மதக்கல்வியையும் ஊட்டவேண்டும்.

தற்காலத்தில் இவைகளைச் செய்தால் போதும் எனத் தோன்று கிறது. ஆயிரக் கணக்காக வாசித்து வரும் மாணுக்கர்களில் எத்தனை பேருக்கு நம் நாடு, மதம், பெரியோர்கள் முதலியவைகளைப் பற்றித் தெரியும் எனப் பார்க்கில் 100-க்கு 2, 3 தான் தேறும். அன்னிய நாடான, இங்கிலாந்து, ஜர்மெனி, ரோம், முதலிய நாட்டு விஷயங்கள் அறிந்தவர்கள் எத்தனை பேர்கள் என்று கணக்கிடும் போது, 100-க்கு 80, 90 ஆகத் தேறுவார்கள். அன்னிய நாட்டு விஷயத்தையே இது வரையிலும் படித்துக்கொண்டு வந்ததினுல் நாம் அடைந்த பயன் என்ன? அவர்கள் நாகரீகம் இவ்விடத்திற்குப் பொருந்துமோ? அவற்றை யே அதிகமாகப் படிப்பதினுலும் நம்நாட்டு நாகரீகம் பெருமை, முதலிய வைகளைச் சிறிதும் அறியாததினுலும் ஏற்பட்ட குற்றங்களே தற்காலச் சீர்கேட்டிற்குக் காரணம்.

வை. நடேசன்.

செவ்வாய்பேட்டை.

---

குறிப்பு:—நம் மக்கள் வாசிக்கும் ஆங்கிலப் பாடப் புத்தகங்களில் மேல் நாடுகளிலுள்ள விஷயங்களைப் பற்றியே கூறப்பட்டிருக்கின்றது, அதிலும் இப்போது அங்கு அச்சியற்றப்பட்ட பாடபுத்தகங்களை நமது ஏழைப் பிள்ளைகள் அதிக விலைகொடுத்து வாங்கவேண்டி யிருக்கிறது. இரண்டொரு புத்தகங்களில் நமது தேச விஷயங்களைப்பற்றிக் கொஞ்சம் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனுல் அவற்றில் கூறப்பட்டுள்ள மதாசார சம் பந்தமான விஷயங்களை நமது பாலர்கள் வாசித்தால், அவர்களுக்குத் தங் கள் மதாசாரங்களின் மகிமையும், தெய்வீகத்தன்மையும், பெருமையும் மிகக் குறைவாகவே அவர்கள் மனதிற்குப் புலப்படும். இதனுல் தீமை விளையுமோ, நன்மை விளையுமோ இதை வாசிப்போரே உணரலாகும். இதைப்பற்றி விரிவாகப் பின்னுல் வரைவாம்.

பத்திரிகாசிரியர்.

# ஆனந்தன்மேல் அவதூறு.

நமது அன்பார்ந்த சந்தா நேயர்களும் ஏனையோரும் இப்போது நாம் கூறும் விஷயத்தைக் கவனிக்கும்படி பிரார்த்திக்கின்றோம்.

கடந்த புரட்டாசிமீ சஞ்சிகையின் 94-வது பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் "ஆரம்பகல்வி உபாத்தியாயர்கள்" என்ற வியாசத்தையும், அதன்பின் நாம் எழுதியிருக்கும் குறிப்பையும் யாவரும் வாசித்திருப்பீர்களென்றே நம்புகிறோம். தயைபுரிந்து இப்போது இன்னொருமுறை அவற்றை வாசித்துப் பார்த்துக்கொண்டு நாம் கூறும் விஷயத்தைக் கவனிக்கக்கோருகிறோம்.

நாகப்பட்டினம் பகுதியிலுள்ள ஆரம்பக்கல்வி உபாத்தியாயர் சங்கநடவடிக்கைகளில் 30-9-20 கூட்டத்தில், "ஆனந்தபோதினி" மேற்குறித்த வியாசத்தில் ஆரம்பக்கல்வி உபாத்திமாரை இழிவுபடுத்திக் கூறியிருப்பதாகவும் "ஆனந்தபோதினி" அதை வாபீசு வாங்கிக்கொள்ளாவிடின் அந்த உபாத்திமார்களின் ஆதரவையை யிழந்து விடுமென்றும் ஒரு தீர்மானம் செய்யப்பட்டிருப்பதாக 14-10-20 தேசபக்தனில் வெளியிடப்பட்டிருக்கிறது.

நண்பர்காள்! நம்மேல் யாரேனும் அவதூறு கூறினால் நாம் அதைப் பற்றி கவனிக்கமாட்டோம். இப்போது ஆனந்தன் மேல் உண்டான அபவாதத்தைப் பற்றிய உண்மையை நாம் எடுத்துக்கூறாவிடின் ஆனந்தனுக்கு நாம் செய்யவேண்டிய நமது கடமையைச் செய்யத் தவறியதாக முடியும்.

நேயர்களே! அந்த வியாசத்தை யெழுதியவர் ஆனந்தனுக்கு மிக்க விசுவாசத்தோடு அரிய விஷயதானம்புரியும் இராணிப்பேட்டையிலுள்ள பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் பு. ஸ்ரீவாசலு நாயுடு அவர்கள். கடிதக்காரர் கூறும் அபிப்பிராயங்களுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்லர் என்பது யாவருமறிந்தவிஷயமே. நாம் எழுதியுள்ள குறிப்பில் உபாத்தியாயர்களைப்பற்றி தூஷணையாக நாம் ஒன்றும் கூறியிருக்கவில்லையென்பது யாவர்க்கும் எளிதில் நன்கு விளங்கும்.

நம் 'ஆனந்தன்' ஆரம்பக் கல்வி யுபாத்தியாயர்களின் நன்மைக்காக உழைத்துவருவது எல்லா உபாத்தியாயர்களும், எல்லாச் சந்தாதாரர்களும் அறிந்த விஷயமே. ஆகையால் ஆனந்தன்மேல் கூறப்பட்ட குற்றம் அபாண்டமென்பதை யாவரும் அறியும்படி கேட்டுக் கொள்கிறோம். இனி அந்த உபாத்திமைச் சங்கத்தார் ஆனந்தனை அவ் வியாசத்தை வாபீஸ் வாங்கிக் கொள்ளும்படி கேட்பதற்கு நாம் கூறும் விடையாவது :—

'ஆனந்தன்' ஒருவரையும் தூஷிப்பதாவது அகௌரவமாகக் கூறுவதாவது கிடையாது. ஆரம்பக்கல்வி உபாத்தியாயர்களைப்பற்றிக் குற்றமாக ஒன்றும் கூறவில்லை. ஆகையால், 'ஆனந்தன்' வாபீஸ் வாங்கிக்கொள்ள வேண்டியது ஒன்றுமில்லையாதலால் அவ்விஷயத்தில் அவர்களைத் திருப்தி செய்ய 'ஆனந்தன்' கூடாதவனாக விருக்கிறான் என்று வருந்துகிறோம்.

இனி நமது நண்பர் எழுதியதிலேனும் ஆரம்பக்கல்வி யுபாத்தியாயர்களைப்பற்றி தூஷணையாகக் கூறப்பட்டிருக்கிறதா வென்று கவனிப்போம். நேயர்கள் இச்சந்தர்ப்பத்தில், இந்த வியாசத்தை யெழுதிய நண்பர் ஸ்ரீமான் பு. ஸ்ரீநிவாசலு நாயுடவர்களும், ஒரு தமிழ் உபாத்தியாயரே என்பதை மனதில் வைக்கும்படி கோருகிறோம்.

"போதுமான கல்வியில்லாதவர்கள் இந்த இலாகாவிற் சொல்ப சம்பளத்திற்காகத் தங்கள் திறமையைக் கவனிக்காமல் வேலைகொடுத்து விடுகிறார்கள் என்று கருதி, இந்த உபாத்தியாயர் வேலைக்கு வந்து விடுகிறார்கள்" என்று கூறியிருக்கிறார். அவர்களில் சிலருடைய தமிழ்க்கல்விக் குறைவைப்பற்றிச் சில திருட்டாந்தங்கள் காட்டியிருக்கிறார். ஆகக்கூடி "இத்தகையோர்சிலரும் உபாத்தியாயர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்குச் சம்பளம் மிகக் குறைவாயிருப்பதால் அதிகாரிகள் அவர்களின் கல்வித் திறமையைக் கவனிப்பதற்கில்லை. ஏனெனில், அதைக் கவனித்தால் போதுமான சம்பளம் தரவேண்டி வருமென்பதற்கே. இதுதான் ஆரம்பக் கல்வியின் ஊழலுக்குக் காரணம். போதுமான சம்பளம் கொடுத்து தக்க கல்வியுடையோரை நியமித்தால்தான் கல்வி க்ஷேம நிலைமைக்கு வரும்" என்ற கருத்தோடேயே அவர் இதை வரைந்திருக்கிறார் என்று எவரும் நன்குணரலாகும். இப்போது அவர்மேலே கூறியபடி அத்தகைய உபாத்தியாயர்களும் சிலர் இருப்பது பொய்யென்று யாரேனும் கூறமுடியுமோ. அப்படியிருக்க, இச்சங்கத்தார் மட்டும் அதைத் தூஷணையாகக் கருதியது விந்தையினும் விந்தையே.

இதன்றி ஒரு சபையில் உபாத்திமார் பேசியபோது, "கல்வி சிறந்ததா செல்வம் சிறந்ததா?" என்ற கேள்வி யுண்டானதாகவும், அப்போது ஒருவர் கல்வி பெரிதென்றால், மற்றபேரனைவரும் "செல்வமே சிறப்புடைத்து; அதன் பொருட்டன்றோ நாம் இவ்வேலையிலமர்ந்து இடர்ப்படுவது" என்று கூறியதாக வரைந்திருக்கிறார்.

இந்த விஷயத்தைப்பற்றி நமது 'ஆனந்தனின் அன்பார்ந்த நண்பரும் ஆரம்பக்கல்வி யுபாத்தியாயர்களின் விஷயமாக மிக்க சிரத்தை யெடுத்துக்கொள்கிறவரும், பத்திரிகைகள் மூலம் தாய்ப்பாஷையின் அபிவிர்த்திக்குப் பாடுபடுபவரும், உத்தமச்சேரி போர்ட் பாடசாலைத் தலைமை யுபாத்தியாயருமாகிய ஸ்ரீமான் P. பரிமணப் பல்லவராயரவர்கள் கீழ்க் கண்டபடி வரைந்துளார்கள்:—

"பண்டிதரவர்கள் கூறுகிறபடி பணத்தின் நிமித்தம் பாடுபடாதோர் எவருமிலர்; எனினும், கல்வியை விடச் செல்வமே பெரிதென்பதை நானும் ஒப்புக்கொள்ளா விடினும் அவ் வாசிரியர்கள் கூறியதாவது, "பொருளில் லார்க் கிவ்வுலகமில்லை" என்றும்,

"மானங்குலங்கல்வி.................. பத்தும் பசிவந்திடப் பறந்துபோம்" என்றும் சொன்னதற்கேற்ப, கல்வி கற்பதற்கும், கற்பிப்பதற்கும், ஆதாரமாய், அத்தியாவசியமாயுள்ள ஆகாரத்திற்கு அதி முக்கியமான செல்வத்தைத் தற்கால நிலைமையை யுத்தேசித்து சிறப்புடைத்தெனக் கூறியதே காரணமா யிருக்குமேயன்றி வேறுகாரணமாயும், அவ்வாசிரியர்களது அறியாமையாயும் இராதெனை எனது சிற்றறிவிற்குத் தோன்றுகின்றது. பல பல பேசுவானேன், நமது ஆனந்தபோதினியின் மேன்மையை யித்தகையதென இயம்ப இயலாதெனினும், அதன் மேன்மையாம் சிறப்புக்குக் காரணம்பொருளேயன்றோ. பொருளின்றி இப்புண்ணிய பூமியின்கண் அவதரித்துள்ள அரும்பெரும் ஆன்மாக்களை நல்வழிப்படுத்த 'ஆனந்தபோதினி'தான் அவதரித்திருக்க முடியுமா? முடியுமென எவராவது இயம்ப முன்வரின் ஒவ்வொருவரும் கொடுக்கும் ஒவ்வொருரூபாய்தா

னெதற்கு? பன்னிரண்டணுவா யிருந்ததை ஒரு ரூபாயாகச் செய்வானேன்? கொடுப்பானேன்? ஆகவே கல்வியின் மேன்மைக்கும் செல்வமே இன்றியமையாத தென்பதையும் மறுக்கொண்ணுறது என்னலாம்.

கல்வியே எதற்கும் இணையிலா மேன்மைபொருந்தியது எனினும், மேற்கூறிய நியாயங்களால் கல்விக்கும் அத்தியாவசியமானது செல்வமென்பதை மற்றுமொரு முறை குறிப்பிட விரும்புவதோடு குறிப்பிட்ட ஆசிரியர்களை யத்தகைய இழிந்த தன்மைக்குக் கொண்டுவந்துவிட்டதற்கு 10 ரூபாய்ச் சம்பளம் கிடைத்தகாலத்தில் எவ்வளவு சவுக்கியமாய் வாழ்ந்து வந்தார்களோ அவ்வளவு கஷ்டத்திற்குள்ளாக்கிய 12, 13 ரூபா சம்பளமே காரணமென்பதை யுணர்ந்து, கனம் பத்திரிகாசிரியரவர்கள் கூறுவதுபோல் அவ்வியாசத்தில் கூறியுள்ள உயர் குணங்களையும், அக் குணங்களால் நம் நாட்டுக் குழந்தைகள் நற்பிரஜைகளாக ஆவதற்கு எதிர் பார்ப்போரனைவரும், அனைத்திற்கும் அடிப்படையான ஆரம்ப ஆசிரியர் கட்குப் போதிய சம்பளம் கிடைக்கும்படி முயற்சி செய்வதோடு, பண்டிதரவர்கள் கூறியுள்ள குறைகளை ஒவ்வொரு ஆசிரியரும் அறவேகளைந்து உபாத்திமைத் தொழிலுக்குள்ள உண்மையான கௌரவத்தை நிலைநாட்ட அவைகளை மற்றுமொருமுறை படித்துப்பார்க்கும்படி ஒவ்வொரு ஆசிரியரையும் மிகவும் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன்.''

நேயர்களே! இவ்வாறு நமது நண்பர் ஸ்ரீமான் பல்லவராயரவர்கள் கூறியுள்ளவையாவும் செல்வம் என்பதைப்பற்றி கவனிக்கும்போது ஒப்புக்கொள்ளவேண்டிய அனுபவமான உண்மைகளேயாகும். உலகில் செல்வத்தால் கல்வியையடைகிறோம். செல்வமில்லாமலும் இலவசமாகவும் கல்வியைப் பெறலாகும். கல்வியால் செல்வத்தைச் சம்பாதிக்கிறார்கள். கல்வி சற்றுமில்லாதவர்களும் செல்வத்தைச் சம்பாதிக்கிறார்கள். இது பிரத்தியட்ச உலக அனுபவம். ஆகையால் இவை யொன்றுக்கொன்று இன்றியமையாத சாதனங்களல்லவென்பது உண்மை யனுபவம். ஆகவே ஆன்றோர் கூறியபடி இரண்டும் பூர்வ புண்ணியத்தால் கிடைப்பனவே. உலகில் இரண்டும் ஒருவரிடமிருப்பது பெரும் புண்ணியமாகக் கருதப்படுகிறது.

ஆனந்தபோதினியைப்பற்றி நண்பர் திருட்டாந்தங் காட்டிய விஷயமாக இரண்டொருவார்த்தைகள் கூற விரும்புகிறோம். ஆனந்தபோதினிக்கேனும், வேறெந்தக் கல்விக்கேனும் கொடுக்கும் பணம் அதை யாவரும் பெற உழைப்போர்க்குக் கூலியே யன்றி அதற்கு விலையல்ல. கல்விக்கு விலை மதிப்பிட யாரால் கூடும். இதனாலேயே செல்வத்தை விடக் கல்வியே எதற்கும் இணையிலா மேன்மைபொருந்தியது என நமது ராயரவர்கள் மேலே கூறியது உண்மையென உணரவேண்டும். அவர் கூறியபடி அந்த உபாத்தியாயர்கள் இப்போதிருக்கும் கஷ்டத்தால் அவ்வாறு செல்வமே சிறந்ததெனக் கூறினார்களாயினும், "கல்வி சிறந்ததா செல்வம் சிறந்ததா!'' என்று ஒத்திட்டுப் பார்க்கும்போது நம்முன்னோர் "மன்னனும் மாசறக்கற்றோனும் சீர்தூக்கில் மன்னனிற் கற்றோன் சிறப்புடையோன்..." என்றும் இன்னும் பல விதமாகவும் தீர்மானமாகக் கூறியுள்ளபடி கல்வியே சிறந்தது என்று கூறுதலே நம் மூதாதைகளின் பெருமையையும், கௌரவத்தையும் காப்பாற்றும் விடையாகுமென்பதே நமது துணிபு.

இனி நாம் கூறவேண்டிய முடிவுரையை நமது நண்பரே மேலே கூறி விட்டிருப்பதற்காக அவருக்கு மிக்க வந்தனமளிக்கிறோம். அதாவது நமது உபாத்திமைச் சங்கத்தார், நன்மையைக்கோரி எழுதப்பட்ட விஷயத்தைக் காரணமின்றிக் குற்றமாகக்கொண்டு, ஆனந்தன்மேல் அபவாதமான குற்றத்தைச் சுமத்தியதைவிட, நமது இராயரவர்கள் இறுதியில் கூறியதுபோல் அத்தகைய குற்றமுடையோர் அவற்றை நீக்கி உபாத்திமைத் தொழிலுக்குள்ள கௌரவத்தை நிலைநாட்ட முயல்வது மிக்க நலமாகும்.

நமக்குள் அத்தகைய ஒற்றுமையோடு நாம் நமது காரியங்களைச் செய்தாலன்றி நமது முயற்சிகள் கைகூடி நம் தாய்நாடு க்ஷேமநிலையடைவது சாத்தியமாகாதெனை அறிவித்துக்கொள்ளுகிறோம். பசுபதியாகிய பரமன் நம்மவர்க்கு உண்மையான ஒற்றுமையின் தன்மை யின்னதென விளக்கி யருள்புரிய வேண்டுமாகப் பிரார்த்திக்கிறோம்.

ஓம்தத்சத். பத்திரிகாசிரியர்.

---

## மாம்பழக்கவி.

முருகப்பெருமான் படைவீடுகளில் ஒன்றாகிய திருவாவினன்குடி என்னும் பழநித்தலத்தைப் பெருமைப் படுத்தும் தண்டாயுதபாணியின் திருவருட் பிரசாதம்பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்த நாற்கவிச்சிங்கமென்ற பட்டம்பெற்ற புலவராவர் 'மாம்பழக்கவி' என்பவர். இவரது புலமையையும் பெருமையையும் நக்கீரன், அருணகிரி இவர்களுடைய புலமையுடன் சீர்தூக்கின் ஏறக்குறையச் சமானமென்றே கூறலாகும். இவர் விசுவகர்மா குலத்தில் உதித்து அக்குலத்தின் திலகமென விளங்கினர்.

இவரது மூதாதையர்கள் சிறந்த சிற்ப சாஸ்திரப் பயிற்சி பெற்றவர்களாய்ப் பாண்டியநாட்டில் நடத்தப்பட்ட சிவாலயத்தின் பணிகளில் நாயக்கர் அரசர்களிடம் பரிசும் கீர்த்தியும் பெற்றவர்கள்; நாயக்கர் திலகரான திருமலை நாயக்கரால் சூட்டப்பட்ட 'மாம்பழம்' என்ற சிறப்புப்பெயர் இவர் குலத்தில் வழி வழி வம்சமாக அப்பெருமையை நினைப்பூட்டும் பட்டப்பெயராய் விளங்கிவந்தது. மாம்பழக்கவியின் தந்தையார் முத்தையாசாரியார் என்பவர் கல்வி கேள்விகளில் சிறந்து, பொலன் நலம் மிகுதியாய், அறந்தாங்கி, விருந்தோம்பி, குலநலமுடைய குணவாரிதியாய், விசவக்ரமா மரபினர்க்குள் வள்ளலாய் வாழ்ந்த செல்வந்தழைத்த சீலர். பழநியம்பதியின் அருட் பெருஞ் சோதியாம் ஆறுமுகப் பெருமான் இணையடி மலர்களில் வற்றாதபற்றுடையவர். இத்தகைய பக்த சிரோன்மணிக்கு சுமார் 80 வருடங்களுக்கு முன்னர் மாம்பழக் கவிராய ரிரண்டாவது புதல்வராய் பிறந்தனர். குலாசார வழக்கப்படி இக்குழந்தைக்கும் 'மாம்பழம்' என்ற பெயர் இயற்கையாய் புனையப்பட்டது.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய் அருமை பெருமையுடன் வளர்ந்த புதல்வனின் பொலிவையும், வாக்கு சாதுரியத்தையும் கண்டு முத்தையாசாரியார் மிகவும் அகமகிழ்ந்து வருநாளில், பழநிப்பதியில் பரவிப் பிணித்த வைசூரி யென்னும் நோய், மூன்று வயதுள்ள சிறுவனையும் பற்றியது; வைசூரியின் கொடுமை சொல்லொணா விதமாயிருந்ததுபற்றி, தாய் தந்தையர்களின் மனம் எரிவாய்ப்பட்ட மெழுகென வருந்தியது. மணி மந்திர ஔஷத முதலிய பலவகையாலும் குழந்தைக்கு

சுகமுண்டாக்க முயன்றும் பலனில்லாது நாளுக்கு நாள் கிலேசத்தையே கொடுத்துவந்த தன்மையைக் கண்ட முத்தையாசாரியார் நம்பிக்கை யிழந்தவராய் தெய்வத்தாலன்றி வேறு வழியில்லை யென உறுதிகொண்டு, மஞ்சள் படுத்திய ஒரு துணியில் ஒரு ரூபாய் முடிந்து 'பழநியாண்டவன் பிச்சை யிவனுக்கும்' என திருநீறு தூவினர். அன்றிரவே மலைக்குச்சென்று அருச்சனை முதலிய ஆராதனை செய்து, மனைவி மக்களுடன் சன்னதியின்முன் நின்று, அப்பனே! ஆண்டவனே! அருட்பெருங்கடலே! அனுதிரட்சகனே! அறியாப் பாலகன் அவதியை யகற்றிடாய்! பாலன் படுந் துயரம் பார்க்கச் சகிக்கிலேன்! மனமிரங்கி மகவிற்குச் சுகமளித்திடாய்! உன்னையன்றி யுற்றதுணை ஒருவரு மில்லைகாண்! உயிர் பிச்சை ஈயும் உமை பாலகனே! அம்மையின் கொடுமையை அகற்றுவதுன்கடன்! ஐயனே! மெய்யனே! ஆறுமுகத் தண்ணலே! வையகம் புகழும் வையாபுரியோனே! என்ப் பலவாறு போற்றி வருந்தி யிரங்கி கண்களில் நீர் சொரிந்த வண்ணமாய்ப் பெருமான் பாதத்திலீடுபட்ட நிலையில் நின்றுவிட்டனர். அச்சமயத்தில் 'மாம்பழம் கவலை உறன்மின்' என்ற சொற்கள் தன் காதிற் கேட்டதென நினைத்துப் பரவசமாயினர். கடவுளிடமிருந்த பக்தி வெள்ளம் கரை கடந்து செல்ல, ஆனந்தக் கண்ணீரைப் பெரிதும் பெருக்கினர். ஐயனை மறுபடியும் போற்றினர். தீனதயாளனெனச் சேவித்தெழுந்தனர். இருகரங்களினலும் 'பிழை பொறுத்தாளும் பெருமானே' என்று கன்னங்களில் அறைந்துகொண்டனர். சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்த வண்ணமாய் தோத்திரம் பாடிப் பரவிப் போற்றினர். பின்னர், திருவருட் பிரசாதம் பெற்று வீடுதிரும்பி 'கடவுள் கட்டாயம் கருணை புரிவார்' என்ற தீவிரமான மனத்திட்பத்துடன் இரவைக் கழித்தனர். மறுநாட் காலையில் வைசூரியின் கொடுமை குறைந்து காணப்பட்டது. கூடக் குழுமி யிருந்தவர் பலரும் பயமில்லை எனப் பகர்ந்தனர். தாய் தந்தையர் வயிற்றினில் பால் வார்த்த தொப்ப விருந்தது இவர்களின் வாய்மொழி.

அந்தோ! என்ன அற்புதம்! சிறுவன் முருக நாமத்தின் உருசியை உட்கொண்டானென்ன சதா சர்வ காலமும் இடைவிடாது முருகா-முருகா-முருகா என்று உபசரித்த வண்ணமா யிருக்கக் கண்டனர். கூப்பிட்ட குரலுக்கு பதில் அளிக்கும்போது, 'முருகா என்று ஆரம்பித்து பதில் பகர்ந்த பின்னர் முருகா'என முடிப்பதையுங் கண்ட தகப்பனுக்கு, ஆண்டவனிடம் மனம் செல்லா நின்றது. இரண்டொருநாளில் வைசூரியின் சின்னங்கள் வாடி வடுவிடக் கண்டனர். ஆயினும், குழந்தையின் கண்களில் ஒளி குன்றியிருப்பதை அறிந்த தாய், தந்தைக் கறிவித்தனள். தகப்பனின் கவலைக்குக் கரையேயில்லை. குழந்தை கண்ணிழக்கத் தான் செய்த தீவினை யென்னவோ? கடவுளின் கருணையிலும் இக்குறை காண்பதென்னே! வம்பன், மாயன், மருகன் இவனே! என்று முருகனிடம் கவலையை முறையிட்டனர். அன்றிரவிலே சோமவாரத்தன்று அர்த்த ஜாம அவசரத்துடன் கருணைநிதி முத்தையாசாரியாரின் கனவிற்றோன்றி 'கண்ணிழந்த குழவிக்கு மதியின் வளம் பெரிதும் உவந்து தந்துளோம். கஷ்டகாலம் கண்ணோடு போயிற்று. விதியின் வலி பெரிதாயினும் மதியின் வலி இப்பாலகனிடம் காணுதி' என்று சொல்லி மறைந்தனர்.

முத்தையாசாரியார் தினந்தோறும் கர்மானுட் டானஞ் செய்த பின்னர் ஆண்டவனைத் தொழுது விபூதிப் பிரசாதம் அளித்து வந்தனர். கண்

ணிழந்த குழந்தையிடம் கரிசனம் காட்டிவந்தனர். தான் சொல்லிவந்த தோத்திரங்களைக் கூடச்சொல்லக்கண்ட தந்தைக்குக் குழந்தையினிடம் ஒரு பிரேமை யுண்டாயிற்று. இனிமையான மதலைச்சொற்களைக் கேட்டு மகிழ்வதோடு, அதனப்பிரசங்கமான வார்த்தைகளையே காணாத ஒரு தன்மையைக்கண்டு வியக்கவும் செய்வர். ஐந்து வயது வரவும், பிள்ளையைப் பள்ளிக்கனுப்புந் திறனில்லையே யென்று வருந்தினராய், நல்லதோர் நாளில்சுபக்கிரகங்களின் வீட்சணியமுள்ள இலக்கினத்தில் தாமே அட்சராப்பியாசம் செய்வித்து ஒவ்வொரு எழுத்தையும் முறைப்படி உச்சரித்து, அவைகளின் வரிவடிவை முதுகில் எழுதிக்காட்டினர். இரண்டோர்நாளில் முதல் எழுத்தாகிய உயிர்மெய் முப்பது எழுத்துக்களின் ஒலி வடிவையும் சொல்லிக்கொண்டு வரிவடிவுகளை ஓர் கற்பலகையில் வரிகோணாது மல்லிகை மொக்கென அழகுற எழுதக்கண்டு ஆனந்த பரவசம் கொண்டனர். தந்தையார், என்னே பெருமானின் கருணை! (தொடரும்)

என். எஸ். ராமச்சந்திர ஐயர், பி.எ., எல்.டி.

---

## "கார்த்திகை"

சகோதர சகோதரிகளே !

சித்திரை முதலாக எண்ணப்படும் மாதங்களுள் எட்டாவதான மாதம் கார்த்திகை யென்னும் பெயரால் வழங்கி நிற்கின்றது. இம்மாதத்தில் குறிஞ்சிப் பூவானகாந்தள் மிகவும் அலர்தலின் அப்பூவிற்குக் கார்த்திகைப் பூவென்றும், அதின்கிழங்கிற்குக் கார்த்திகைக் கிழங்கென்றும் பெயர்வழங்குகின்றது. இம்மாதத்தில் பூமிதேவி யானவள் தன் உடல் முழுவதும் பலவர்ணப் பூவேலை செய்த பசும் பட்டாடையால் அலங்கரித்தது போலப் பச்சிலைத் தழைகளால் மூடப்பெற்று விளங்குவள்.

இம்மாதத்தில் மழை காரணமாகக் குளம், கிணறு முதலிய எங்கு பார்த்தபோதிலும் நீர் நிறைந்து நிற்கும். ஆவணி மாதமான கார் காலத்தில் துவக்கப்பட்ட நெற்பயிர் கார்த்திகை மாதத்தில் முற்றுப் பெறுதலின் அவைகளைக் கார்த்திகைக் கார் என்னும் பெயரால் வழங்குகின்றனர்.

பூவும், கிழங்கும், பயிரும், கார்த்திகையின் பெயரைக்கொண்டு சிறந்ததுபோல இந்த மாதத்துப் பிறையைச்சுட்டிக் கார்த்திகைப் பிறையெனக்கூறுவார்கள். இம்மாதத்து வரும் சோமவாரங்கள் மற்றைய மாதச் சோமவாரங்களினும் கார்த்திகைச்சோமவாரமென மிகப்பாராட்டப்படுவதோடு, சிவாலயங்களில் பூசனை முதலியன விசேஷமாக நடத்தப்படும். இம்மாதத்தில் கார்த்திகை நட்சத்திரம்வருந் தினத்தைக் கார்த்திகை கார்த்திகை யென்று மிகச்சிறப்புற வழங்குவார்கள். எத்தினங்களில் தீபமேற்றப்பட்டாலும் கார்த்திகை நாளிலேற்றுந் தீபம் விசேஷமானதாகிக் கார்த்திகைத் தீபமென்னும் பெயரையே கொண்டு நிற்கின்றது. இத்தினத்தில் ஜனங்கள் அடுக்களை, புறக்கடை, தலைக்கடை யாதிகளிலும் தீபாலங்காரஞ் செய்து திருவிழாக் கொண்டாடுகின்றனர். கணேசாலய கந்தாலய சிவாலய விஷ்ணு வாலயங்களிலெல்லாம் இக்கார்த்திகை நாளில் விசேஷ பூசையுற்சவங்கள் நடத்தப்படுகின்றன.

இம்மாதமானது நாள், கிழமை திதி முதலிய ஒவ்வொன்றானுஞ் சிறப்புள்ளதாய் விளங்குகின்றது. இம்மாதத்திற் சைவரிற் பெரும்பாலாரும் ஏனையோரும் திருவண்ணாமலையில் நடக்கும் கார்த்திகை தீப தரிசனத்துக்குப்போவது சிறந்த வழக்கம். இக்கார்த்திகை தீபதினத்தில் சனங்கள் தீபதரிசனஞ் செய்தே போசனஞ் செய்கின்றார்கள். திருவண்ணாமலையில் நடக்கும் தீபோற்சவத்தை ஊன்றி யாராய்வோர் பல ரகசியங்களை அறிவார்கள்.

"ஆர்த்தி யெல் லாமளிக்கும் அண்ணல் வரம்பெற்ற
கார்த்திகை யேயுனக் காயிர நமஸ்காரம்"

அந்த ரகசியங்களுள் அன்பர்களறியத்தக்க அதிமுக்கியமான ஒன்றைக்காட்டுவோம். மேற்பேசிய தீபக்காட்சியாகிய மகோற்சவத்தைக் கண்டு ஆனந்தித்தவரது கண்களே கண்கள். இது சிவபெருமான் உலக முழுதும் சோதிவடிவாய் விளங்கி நிற்கின்றமையை அறிதற்கு ஓர் பெரிய அறிகுறியாக எவ்விடத்தும் தீபமிட்டுத் தரிசிக்கும் வழக்காம். "மலைமேலிட்ட விளக்கு" என்றுவழங்கும் உலகத்து முதுமொழியானும் இதன் மகிமை புலப்படும். இத்தீப மிடுதல், தேகம் என்னும் ஆலயத்திலேயுள்ள மனம் என்னும் தகழியில் அறிவாகிய நெய்யை நிறைத்து உயிர் என்கிற திரியிலே பிராணன் என்னும் காற்றை நிறுத்தி, ஆணவமலம் என்னும் இருள் நீங்கச் சிவஞானம் என்னும் தூண்டா விளக்காகிய ஞான தீபத்தையேற்றினோர் சிவபெருமானது திருவடிப் பேறாகிய பேரின்ப முத்தியையடைவார்என்னும் உண்மைவிளங்கவைத்த ஓர் பேருபகாரமேயாகும். அது

"உடம்பெனு மனை யகத்து ளுள்ளமே தகழி யாக
மடம்படு முணர்நெய் யட்டி யுயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமா காளை தாதை கழலடி காண லாமே"

என்னுந் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தாற்றெளிக.

வா. ர. வேணுகோபால் செட்டி,
செங்கழனிமேடு, வாயலூர்.

குறிப்பு:—திருவண்ணாமலைத் தீபத்தின் ஐதீகத்தைப்பற்றிய வரலாறு புராணத்தில் கூறப்பட்டிருப்பது யாவருமறிந்ததே. அதன்படி யாவற்றிற்கும் மூலகாரணமாகிய அத்துரிய பரம்பொருளின் ஆதியந்தங் கடந்த நிலை யொருவராலுங் காண முடியாததென்று அறியக்கிடக்கிறது.

இன்னும் அத்தீபம், ஆன்மாக்கள் பிறப்பிறப்பாகிய பெருங்கடலைக் கடந்து, முத்தியென்னும் கரையைச்சேர வழிகாட்டும் தீபஸ்தம்பமாகும் (Light House-இலயிட் ஹவுஸ்) என்று சோணசைல மாலையில் கூறப்பட்டிருக்கிறது.

இத்தகைய விஷயங்கள் ஒவ்வொன்றும் மோக்ஷ மார்க்கத்தைக் காட்டும் குறிப்புகளேயாகும். இதனால் நம்தெய்வீகப் பூமியில் மோக்ஷமார்க்கம் எப்போதும் மறைபடாதென்பது உண்மை யென உணரலாகும். மோக்ஷ மார்க்கத்தின் சத்தியம் என்றும் பிரகாசிக்குமாறு நமது முன்னோர்கள் ஏற்படுத்தியிருக்கும் கொள்கைகளடங்கிய நமது மதத்தின் பெருமை அளவிடற் பாலதன்று.

பத்திரிகாசிரியர்.

## தமிழின் பெருமையும், தற்கால நிலைமையும்

(133-ம் பக்கத் தொடர்ச்சி.)

இக்காலத்தும் பல சபைகள் உள. அவைக் கண்ணுற்று ஆனந்திப்பார்கள் பெரும்பாலும் கற்றுணராதவரே; ஆனதுபற்றி நடிப்பார் நாடக விதியினின்றும் வழுவி, அவர்களது மனோரஞ்சனையைக்கருதி, லோடா, கிண்டிப்பாட்டுகள் பாடி மகிழ்வூட்ட அவர்களது திருச்செவியில் நீதிகளில்லா, சங்கீதத்திற்கு முரணுடை லோடா, கிண்டிப்பாட்டுகள், நுழையவும், இனிது மாந்தி, பேஷ் பேஷ் என்று கரகோஷம் செய்வதை யவர்களே சற்று சிந்திப்பாராயின் வெட்கமடையாதிரார். இத்தகைமையான நாடக வரங்குகளால் விளையும் தீங்குகள் அளவற்றன. முக்கியமானது மூன்று பெருந்தோஷங்கள். அவைகள் எவை யெனில், முதலில் பெருங்காவியங்களை நிந்திப்பது, இரண்டாவது அவைகளையியற்றிய கர்த்தாக்களை யலட்சியம் செய்வது, மூன்றாவது சங்கீதத்தை அவமதிப்பது, ஆகமூன்றும் பெருங்குற்றங்களே; அஃதினும் கடையானது மிக்கக் குற்றமே. ஓவியத்துறையென்றதற்கு சிற்பம் கரையில்லாதது என்பதுடன் எவராலும் கரைகாணாதது எனப் பொருள். அஃதேபோல் சங்கீதமும். அதை அவமதிக்கும் ஆடவ பெண்டீர்கள் எத்தன்மையரோ! என்னே? நற்சுவை பொருந்திய காவியங்களை இசைத்தமிழில் கற்காது, வர்ணமெட்டைப் பிரதானமாகக் கொண்டு சரித்திரத்தை முற்றிலும் மாறாக நடத்தும் நாடகத்தைக் கண்ணுறல்வேண்டும். எல்லாம் காலக்கொடுமையே. அந்தோ!

இனி நாற்கவிகளின் தன்மையை யுரைப்பாம்:—

ஆசுகவி யென்றால், கேட்கும் கேள்விகட்கோ, நினைத்த மாத்திரத்திலேயோ கவி சமைத்தல்.

மதுரகவி யென்றால், அக்கவியைப் படிப்பவர்களுக்கு மது மாந்தின தன்மையை யொக்க விருத்தல்வேண்டும்.

வித்தாரக்கவி—இஃது மிக இனிமையாகவும், விசித்திரமாகவு மிருத்தல்வேண்டும்.

சித்திரக்கவி—எழுதிப் பார்த்தால் சித்திரங்களை யுடைத்தாயிருத்தல்வேண்டும்.

இத்தன்மையாக முத்தமிழ் நாற்கவியுடைய விப்பாடை தெய்வத்தன்மையுடைத்து என்றால் எப்பாடை இதற் குவமையாகும்—தெய்வத்தன்மையுடைத்து என்பதற்கு அநேக உதாரணங்களுள. சிலவற்றை விளக்குவாம்:—

(a) வீரசோழியம்.—கச்சியப்ப சிவாச்சாரியரால் கந்தபுராணமியற்றப்பட்டதென்பது விளங்கும். அவர் அப்புராணத்தை அரங்கேற்றிய காலத்து, முதற்கவிக்குக் குற்றம் கூறப்பட்டது. அதாவது,

“திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்”

என்ற பனுவலின்கண், ‘திகழ் தசக்கரத்து செம்முகம் ஐந்துளான்’ என்ற

பதங்களில் 'ழகர' ஒற்றிற்குப் பின் 'த' கரம்வரின் 'ட' கரமாக மாற எச் சூத்திரம் கூறியுள்ளதென, அவர்விழிக்க, முருகர் தமது கிருபையால் வீர சோழியம் என்னு மிலக்கணத்தை யளித்து அதிற்காட்டி அரங்கேற்றி வைத்தார்.

(b) இறையனாரகப்பொருளுரை.—பாண்டிநாட்டில் பஞ்சந் தீர்ந்தகாலத்துப் பாண்டியன் அகப்பொருள் இலக்கண மிலாதுவருந்த, சொக்கநாதன் சங்கப்பலகையின்கீழ் இலக்கணச் சுவடி ஒன்றை எழுதிவைத்து மறைந்தார். அதற்குரை எவ்வளவோ புலவர் எழுதியும், படித்தும் ஏற்கப்படாது, நக்கீரரது உரைக்குமட்டும் ஊமையனும் ஐயாண்டுப் பிராயத்தனுமாகிய உருத்திர சன்மனால் தலைக்கம்பம் செய்து அங்கீகரிக்கப் பட்டமை காண்க.

(c) முதலையுண்ட பாலனையழைத்தது.—சேர நன்னாட்டிலே அவிநாசியென்னும் திருத்தலத்தின்கண்ணே நமது சமய குரவர் நால்வரில் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனார் சென்ற காலத்து. ஓர் மனையில் மங்களவொலியும், எதிர் மனையில் அழுகையொலியுங் கேட்டு, அழுதாரில்லத்தே சென்று யாது காரணம் என வினவ, அங்கிருந்த ஒருமாது தன் குமாரனை முதலையுண்டதாகவும், அதேயாண்டுடைய எதிர் ஆத்துச் சிறுவன் உபநயனம் செய்துகொள்வதாயும், தன் குமாரனுமிருப்பின் அவனுக்கும் உபநயன விழா நடத்தி இன்புறும் பாக்கியம் அடையலாமே, இல்லாதுபோயிற்றே எனத்துக்கிப்பதாகவும் கூறக்கேட்டு, அவர்களுடன் அம் மைந்தன் எத்தடாகத்திலிறந்தானோ வதற்கேகி நோக்கி, நீர் வற்றியிருக்க, நீர் உண்டாக்கி அதினின்றும் முதலையை யழைப்பித்து, அதன் உதரத்தினின்றும் பாலனையும் அழைப்பித்துக்கொடுத்து அவர்களை இன்புறுமாறு தன் பனுவல்களால் செய்தார்.

(d) நெற்கோணர்ந்தது.—மேற்கூறிய சுந்தரமூர்த்தி நாயனாரால்,

"நீளநினைந்தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மடவா ளவள் வாடிவ ருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டை யூர்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவை யட்டித்தரப் பணியே"

என இசைக்கப்பட்ட காலத்து பரமசிவம் நெற்குவியல்களைக் கொண்டு சேர்த்துப் பரவை நாச்சியாரது ஊடல்தணித்தார். இத்தமிழ்ப் பனுவல்களால் எலும்புப் பெண்ணுருவங்கொண்டதும், மறைக்கதவினைத் திறந்ததும் நடந்தேறியதன்றோ—இதனை நோக்கியே

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்டதும் மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்"

எனக் கூறியிருப்பதையுங் காணலாகும்.

(e) ஏடு எதிர்சென்றது.—பாண்டியநாட்டை யாண்டுகொண்டிருந்த சமணராஜன் ஞான சம்பந்தமூர்த்தி நாயனாரைப் பல்வகைத் துன்பத்திற்கு உள்ளாக்கியும், அதினின்று மீண்டவரைப்பார்த்து ஏடெழுதி

வைகையாற்றில் விடக் கட்டளையிட, அந்த ஏடு எதிர்நோக்கிச் செல்லவே தமிழ்க்குத் தெய்வத்தன்மையுண்டென்பது 'உள்ளங்கைநெல்லிக்கனியே'.

(f) கற்சிலைகளின் சிரக்கம்பம்.—பொய்யா மொழிப்புலவர் ஒரு கால் சென்றபோது பாண்டியவரசன் அவரை ஓர் பனுவற் பாடும்படிக்கும், அதை நாற்பத் தொன்பதின்மரின் சிலைகள் சிரக்கம்பம் செய்து ஒப்ப வேண்டுமென்றும் கூற, அவரும் அவ்வாறேபாட, அக்கல்லுருவங்கள் சிரக் கம்பம் செய்தன. மற்றும் பொற்றாமரைக் குளத்தில் அமிழ்ந்த சங்கப் பலகை மிதக்கவும் செய்தது தமிழ்க்கவியே.

(g) கம்பராமாயணத்தை அரங்கேற்றிய காலத்து, துமி என்னும் பதமானது உலகவழக்கென்று நிரூபிக்க சரஸ்வதியும் இடைச்சியானாள்.

(h) சர்ப்பம் தீண்டிய பாலனைத் தன் கவியால் உயிர் பெறுவித்தார் கம்பநாடர்.

(i) வில்லிபுத்தூர் இறைவன் தன் கண்களைப் பெறும்படி தமிழில் பாரதம் பாடினார்.

(j) நக்கீரர் பூதத்தால் கொண்டுபோகப்பட்ட காலத்து திருமுருகாற்றுப்படை எனும் நூலைத் தமிழிற் பாடி, தான் மட்டுமன்றி தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரையும் விடுவித்துப் பூதத்தையும் முருகனருளாற் கொன்றார்.

(k) ஆதிக்கும் பகவனுக்கும் பிறந்த ஔவை முதல் எழுவரும் தங்கள் தாயார் தம்மை விட்டகலப் பரிதபிக்கும் நிலைமையைக் கண்டு தமிழிலன்றோ பாடித் தாயினது வருத்தத்தை நீக்கினார்கள்.

(l) தில்லையம்பலத்தே திருநடம் பயிலும் சிதம்பரேசுவரரது குழைகள் கீழேவிழ, அதை விந்திய மலையிலிருந்த திருவள்ளுவர்திருந்து பாடினதும் தமிழ் என்பதிற் றடையோ? மற்றுமிவர் ஏலேலசிங்கரது கப்பல்களினிடை செய்த திருவிளையாடலாலும், இறுதி காலத்து நடத்திய மாட்சிமையாலும் தமிழின் அருமையை யறியலாகும். மற்றும் திருக்குறளைச் சங்கப் பலகையில் வைக்க இடங்கொடுக்கப் பெற்றதும், சீத்தலைச் சாத்தனார்க்குத் தலைவலி தீர்ந்ததும் அறிவோம்.

(m) சேக்கிழார் பெருமான் திருத்தொண்டரது புராணத்தை யியம்புங்காலை "உலகெலாம்" என அடியெடுத்துக் கொடுத்ததும் அறிவோம்.

(n) ஒட்டக் கூத்தப்புலவர் எழுபது தலைகளை வெட்டி யெறிந்து முண்டத்தின் மீது வீற்றிருந்து ஈட்டி எழுபது பாடி, பிறகு முண்டங்களையும் தலைகளையும் சேர்த்துத் தமிழ்க் கவிகளால் உயிருண்டாக்கியதும் உண்மையன்றோ?

(தொடரும்)

R. S. சாம்பசிவ சர்மன்,
தமிழ்த்தொண்டன்.

---

# அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(158-ம் பக்கத்தொடர்ச்சி)

## 3-வது அத்தியாயம்.

தபாலாபீஸுகளில் வேலை செய்யும் இலிகிதர்களுக்குப் பலவிதக் குழப்பமான வேலைகளுண்டு. மற்ற எல்லா இலாகாக்களைக் காட்டிலும் அவர்கள் வேலை ஜவாப்தாரியும் தொந்திரவுமானது; அதிலும் பெரிய நகரங்களிலுள்ள தபால் ஆபீஸுகளிலிருப்பவர்கள் கஷ்டம் சொல்லவேண்டுவதில்லை. அதனாலவர்கள் சாதாரண வேலைகளில் ஒரு வார்த்தையை யெழுதுவதற்குப் பதில் அதன் முதல் எழுத்தைமட்டும் எழுதி மற்றவற்றிற்குப் பதில் நெடுக ஒரு கோடு கிழித்து விடுவதைச் சாதாரணமாய்க் காணலாம்.

இப்போது நமது நாட்டில் வி. பி. மூலமாய் வர்த்தகம் நடத்துவோர் பலர். ஆர்டர் செய்தவன் வி பி.யைப் பெற்றுக்கொண்டபின் அதே பாரத்தில் நாம் எழுதிய இரசீதே நமக்குத் திரும்பி வருவது முறைமை. ஆனால் எக்காரணத்தாலோ மிக்க திட்டமாய் நடக்கும் ஆங்கில துரைத்தனத்தின் தபால் இலாகாவில் அத்தகைய இரசீதுகளை யெவ்வாறோபோக் கடித்துவிட்டு வேறு இரசீது நகல் எடுத்தனுப்புகிறார்கள். ஆயினும் அந்த இரசீதைச் சரியாய் எழுதி யனுப்பினால் ஒரு கெடுதியுமில்லை. அதில் ஆசாமி பெயரை யாரும் படிக்க முடியாதபடி, இன்ன பாஷையென்று தெரியாதபடி பெயருக்கொரு கோடுமட்டும் போட்டு விலாசத்தை யடியோடு விட்டுவிடுவதோடு, வர்த்தகன் தன் குறிப்பிற்காகப் போட்டிருந்த நம்பரையும் அடியோடு விட்டு விடுகிறார்கள். இதனால் வர்த்தகன் இப்பணம் எங்கிருந்து வந்ததென்றே யறியாமல் திண்டாடி வருத்த மடைகிறான். இது மட்டுமல்ல; கெட்ட பெயரும் பெற்றுக்கொள்கிறான். எவ்வாறெனின்:—

வி. பி. பணம் வந்ததோடு அந்த விஷயம் முடிவதாயின் தொந்திரவோடு ஒழிகிறது. வி.பி. யைப் பெற்றுக்கொண்டு பிறகு இன்னும் இரண்டு மூன்று மாதத்திற்குப் பணம் அனுப்பியவனுக்குச் சாமானோ புத்தகமோ யனுப்பவேண்டியதாயின், வர்த்தகனுக்குப் பணம் அனுப்பியவன் இன்னவனென்று தெரியாவிட்டால் இவன் எப்படி யனுப்புவது? இதனால் பணம் அனுப்பியவன் வர்த்தகனை மோசக்காரனென்று குற்றம் சாட்டுகிறான். இது இப்போது நமக்கே அனுபவமாய் நடக்கும் விஷயம். இன்னொருவர் கஷ்டத்தை யவர்கள் கவனித்தால் இது இப்படி நடவாது. அவர்கள் என் அப்படி கிறுக்கி விடுகிறார்கள் என்றால் அவர்களுக்கிருக்கும் மிதமிஞ்சிய வேலை யப்படியிருக்கிறது. கடைசியில் அவ்வளவு அதிக வேலையிருப்பதற்குத் தக்க ஆள்களை வைக்காதவர்கள் குற்றமே இந்தத் தொல்லைக்குக்காரணம். துரைத்தனத்தார் சங்கதியைப் பார்த்தாலோபணமுடையாயிருக்கிறது. உலக நடக்கையும் அனுபவமும் இம்மாதிரியிருக்கிறது.

பெரிய நகரங்களில் கால் மணிக்கொன்று அரை மணிக்கொன்றாக மெயில்கள் வந்துகொண்டே யிருந்தால் அந்த இலிதருக்கு வேலை முடிந்தது என்ற காலமேயில்லை.

புது நகருக்கும் அமலா பூருக்கும் இடையிலுள்ள மேலையூர் நகர் தபாலாபீஸில் அம்பலவாணன் என்ற வாலிபன் இலிகிதனா யிருக்கிறான்;

அவன் மிக்க யோக்கியன். தன்வேலையை மிக்க சுறு சுறுப்பாகவும், அக்க ரையோடும் செய்பவன். இரண்டு வருடகாலமாய் தபாலாபீஸில் உழைத்து நல்ல பெயரெடுத்தான். அவன் ஒரு வாலிபனே. பாடசாலையை விட்டதே தபாலாபீஸில் வேலைக்கமர்ந்தான்; குடும்பம் ஏழைக் குடும்பம். ஆதலால் அவன் வரும்படிதான் அவசியமானதா யிருந்தது. இரண்டு வருடங்களில் அவன் தன் எஜமான்மாருக்கு பூரணத் திருப்தி யளித்ததால் சம்பளமும் உயர்த்தப்பட்டது. அது அவனுக்கு மிக்க உற்சாகத்தையும், சந்தோஷத் தையு மளித்தது.

ஒவ்வொரு சமயத்தில் முன்னுக்கு ஏதோ தனக்கு அபாயம் நேரிடும் போல் அவன் மனதிற்படுவதுண்டு. அவன் தன் சகலபாடிகளாகிய இலிகி தர்களோடு எவ்வித கேளிக்கைகள் விளையாட்டுகள் எதற்கும் செல்வ தில்லை. ஏனெனில், அவர்களைப்போல் செலவுசெய்ய அவனால் இயலாது. செல்வமும் நற்காலமும் ஒரு நிலையானதோ! யாக்கையைப்போல் நீர்மேற் குமிழி போன்றதே.

ஒருநாள் அம்பலவாணனுக்கு விருந்துக்கு அழைப்புச்சீட்டு வந்தது. அது தன்னோடுகூட வாசித்த ஒரு நண்பனுடைய பிறந்தநாட் கொண் டாட்டத்திற்காக நடக்கும் விருந்து. அதற்கு அம்மேலூரிலுள்ள பெரிய மனிதர்கள், பிரபுக்கள், பிரமுகர்கள் யாவரும் வந்திருந்தார்கள். இந்த விருந்திற்கு விதியின்றிச் செல்லவேண்டியிருந்ததால் அம்பலவாணன் ஒப் புக்கொண்டான்.

அந்த விருந்திற்கு ஒரு செல்லப் பிரபுவின் புத்திரன் வந்திருந்தான். அவன் வாலிபன். யாவர்க்கும் அவன் நடக்கையில் மட்டும் சந்தேகமே. ஆனால் செல்வத்திற்காக அவனுக்கு மரியாதை யளித்துவந்தார்கள். அவன் யாரெனில் இரங்கநாதன் சம்பந்தப்பட்ட கொலைக் குற்றத்தைச் சேர்ந்த கோபாலுசாமி ஸர்தாரின் புத்திரனாகிய சாமிநாதனே.

சாமிநாதன் மிக்க அகங்காரி யென்றும், பெருமைக்கார னென்றும், துர்நடக்கை யுடையவனென்றும் யாவராலும் சாதாரணமாய்க் கவனிக்க ப்படுபவன். ஆனால் பணத்திற்காக யாவரும் அவனைக் கௌரவப்படுத்தி வருவது வழக்கமாயிருந்தது.

அன்று அங்கு நடக்கும் நடனத்தில் மிக்க அழகுவாய்ந்த செல்வச் சிறுமியாகிய பூங்காவனம் என்னும் கன்னிகை நமது அம்பலவாணனோடு நடனம் புரியும்படி ஜதை பிரிக்கப்பட்டது. இது தற் செயலாய் ஏற்பட் டானதே யொழிய அம்பலவாணன் கோரியதல்ல.

நடனத்திற்குத் தொடங்கும்போது சாமிநாதன் பூங்காவனத்தின் அருகில் நிற்கும் அம்பலவாணனை முரட்டுத்தனமாய் அப்புறம் தள்ளிக் கொண்டு, அக்கன்னிகையை நோக்கி, "இந்த நடனத்திற்கு நான் தான் உனக்கு ஜதையென்று கருதுகிறேன்" என்றான். அம்பலவாணன் தன க்கு அவமானம் நேரிடுமோவென்று பயந்து பேசாமல் அக்கன்னிகையின் முகத்தை நோக்கினான்.

பூங்காவனம் சாமிநாதனை நோக்கி "நீ மறந்துவிட்டாய் போலும் இம்முறை நான் அம்பலவாணனோடு நடனம் புரிவதாய் வாக்களித்துவிட் டிருக்கிறேன்" என்றாள்.

சாமிநாதன் அதோடு சும்மாவிராமல், இரண்டடி முன்னே சென்று தன் ஜேபியிலிருந்த டிக்கட்டுகளை யெடுத்து அவசரத்தோடு ஒன்றில் என்னமோ எழுதிவிட்டுப் பூங்காவனத்தை நோக்கி, "நீ மறந்து விட்டாய். முதல் நடனத்திற்கு உன் பெயரே என் சீட்டிலிருக்கிறது'' என்றான்.

பூங்காவனம் "இல்லையில்லை. உன் டிக்கட்டிலிருக்கும் பெயர் நான் எழுதியதல்ல. என்னோடு முதல் நடனம் செய்யவேண்டுவது இவரே" என்று அம்பலவாணன் கரத்தைப் பற்றிக்கொண்டு திரும்பினாள்.

சாமிநாதன் தன் பொறாமைக் குணத்தை யடக்க முடியாதவனாய், அம்பலவாணனை நோக்கி " அடே பாப்பர் பயலே! இது உன்னால் உண்டான சில்மிஷம்'' என்றான்.

அம்பலவாணன் தன் கோபத்தை யடக்கிக்கொண்டு " நீ பெரிய மனிதத்தன்மை யில்லாதவனா யிருப்பதால் உன்னிடம் பேசலாகாது" என்றான்.

சாமிநாதன் " அடே தரித்திரம் பிடித்தபயலே ! எனக்கு விரோதமாய் நடப்பதன் பயனைக் கூடிய சீக்கிரத்தில் நான் காட்டுகிறேன் " என்றுகூறி அவன்மேல் பாயப்போனான்.

அச்சமயம் அருகிலிருந்த இரண்டு பெரிய மனிதர் இவன் நடத்தை தெரிந்தவர்களாதலால், அச்சமயம் இவன் குடித்திருப்பதை யறிந்து வேலைக்காரரை யழைத்து இவனைப்பிடித்து வெளியில் கொண்டுபோய் விட்டுவிட்டார்கள். இவன் வழக்கம்போல் தனக்கு நேர்ந்த அவமானத்திற்கு அம்பலவாணனே காரணம் எனக்கொண்டு அந்தவேளை முதல் அவன்மேல் கொடிய வஞ்சம் வைத்துக் கொண்டான்.

* * * * *

* * * * * *

இரங்கநாதன் ஸ்மரணைவந்து கண்விழித்துப் பார்க்கும்போது தான் இருந்த வீட்டினறையி லில்லை. யாவரும் பகிரங்கமாய்ச் சாராயம் குடிக்கும் அறையிலிருக்கிறான். தன்முன் இரண்டு போலீஸ்காரர் நிற்கிறார்கள். மற்றபேர் தன்னைச் சூழ்ந்துகொண் டிருக்கிறார்கள். தன் கரங்களில் விலங்குமாட்டப்பட் டிருக்கிறது. அதைக் கண்டதே கோபத்தோடு "இதென்ன இது ?'' என்றான்.

போலீஸ் அதிகாரி " இது நீ என் கைதியென்று அர்த்தம். ஏனெனில் இதோ நிற்கும் இந்த ஹோட்டல் சொந்தக்காரரை அக்கிரமமாய்த் தூக்கியதற்காக '' வென்றான்.

இரங்க:—" நான் என் புத்திரியைத் தண்டித்தால் இவன் ஏன் என்னைத் தடைசெய்யவேண்டும்?'' என்றான்.

மார்க்கபந்து:—"தண்டிப்பதா. சண்டாளன் நீ யதைக்கொன்று விட்டிருப்பாயே. உன் புத்திரியா? அது உண்மையா, பார்ப்போம்'' என்றான்.

போலீஸதிகாரி:—" நீ குற்றம் செய்திருப்பதாகவே விளங்குகிறது; எழுந்துவா பேசாமல்'' என்றான்.

இரங்க:—அடேமார்க்கபந்து ! இது உன்வேலை; இதற்காக நீ யுன் மரண பரியந்தம் துக்கம் அனுபவிக்கச் செய்வேன்.

மார்க்க:—" நீ யப்படிப்பட்ட அயோக்கியனென் றறிவேன். ஆயினும், நான் உனக்கு அஞ்சவில்லை. இதுமுதல் நீ என் ஹோட்டல் வாசற்

படிக்குள் அடியெடுத்து வைத்தாயோ பத்திரம், பெரிய ஆபத்திற்குள் சிக்கிக்கொள்வாய் ஜாக்கிரதை ! ஜாக்கிரதை!" என்றான்.

இரங்க:—முதலாவது நீ நாளைக்கு என் பெண்ணை யென்னிடம் ஒப்பிக்க வேண்டும். பிறகு அதற்கு நீதுர்ப்புத்தி கற்பித்ததற்காகத் தக்க தண்டனை யடையப் போகிறாய். தந்தைக்கும், புத்திரிக்கும் விரோதம் உண்டாக்கியதற்காக உன்னைத் தண்டிக்கச் சட்ட மிருக்கிறது.

மார்க்க:—முன்னே யது உன் புத்திரியென்று ருசுப்படுத்து. நீ அதை ருசுப்படுத்த முடியாதென்று நான் அறிவேன்.

இரங்க:—"எல்லாம் பார்ப்போம்" என்று அகங்காரத்தோடு கூறினான்.

போலீஸார் அதற்குமேல் பேசவிடாது அவனைப் பிடித்துக்கொண்டு சென்றார்கள்.

மறுநாள் நியாயாதிபதிமுன் குற்றவிசாரணை நடந்தபோது இரங்கநாதன் அடிகளால் மார்க்கபந்துவின் முகத்தில் உண்டாயிருக்கும் காயங்களால் அவன்மேல் குற்றம் பூரணமாய் ருசுப்படுத்தப்பட்டது. அதனால் நியாயாதிபதி அவனுக்கு ஐம்பது ரூபாய் அபராதம், தவறின் ஒருவாரம் காவல் தண்டனை விதித்தார்.

இரங்கநாதன் அபராதத்தைக் கொடுத்துவிட்டுத் தன் புத்திரியை யழைத்துப்போக நேராய் மார்க்கபந்துவின் ஹோட்டலுக்குச் செல்லாமல், பாரூர் இரயில் ஸ்டேஷனுக்குச் சென்று ஒரு பிரயாணச் சீட்டு வாங்கினான். அங்கு சற்று எட்ட நின்றுகொண்டிருந்த இரண்டு ஆசாமிகள் இவனை விடாது பார்த்துக்கொண்டே யிருந்தார்கள். அவர்கள் பார்வை இவன் எங்கு சென்றாலும் இவனைவிட்டு நீங்கவில்லை.

அவர்கள் இருவரும் பிரயாணிகள்போல் கையில் பிரயாணப் பைகளை வைத்துக்கொண்டு முகம் மறையும் விதமாய்த் தொப்பிகளை யணிந்திருந்தார்கள். அவர்களில் ஒருவனுக்கு மீசையில்லை.

இரங்கநாதன் டிக்கட்டை வாங்கிக்கொண்டு சென்றதே, மீசையுடையவன் அவன் போகுமிடத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான். மீசையில்லாதவன் டிக்கட் விற்பவனிடம் சென்று தன் உட்சட்டைக்குள்ளிருக்கும் பதக்கத்தை யவனுக்குக் காட்டி,

"இப்போது அவன் வாங்கிக்கொண்டுபோன டிக்கட்டு எந்த ஊருக்கு?" என்றான்.

டிக்கட் விற்போன் இவன் துப்பறியும் உத்தியோகஸ்தன் என்று தெரிந்துக்கொண்டு, "அவன் மேலை யூருக்கு டிக்கட் வாங்கினான்" என்று கூறினான்.

பிறகு துப்பறியும் ஆசாமிகளாகிய இருவரும் தங்களுக்குள் ஏதோ கலந்து பேசிக்கொண்டு எட்டவே யிருந்து இரங்கநாதன் மேல் கண் வைத்துக்கொண் டிருந்தார்கள். இத்துப்பறிபவர்கள் நமது ஆனந்த ஸிங்கும் தேவராஜுமே யென்று நண்பர்கள் அறிந்துகொண் டிருப்பீர்களென்றே நம்புகிறோம்.

தேவராஜு:—" இதுவும் நமது நல்ல அதிஷ்டமே யென்று கருதுகிறேன் " என்றான்.

ஆனந்தஸிங்:—"அது சரிதான்—நமது ஆசாமி மேலை யூருக்கு ஏன் செல்கிறான் என்பது எனக்கு விளங்கவில்லை" என்றான். (தொடரும்.)

ஆரணி குப்புசாமி முதலியார்.

## பொதுசமாசாரங்கள்

### விளம்பரம்.

நமது சந்தா நேயரில் ஒருவராகிய "ம-ா-ா-ஸ்ரீ, N. செல்வதுரை, P. W. Overseer F. M. S. Railways, S. Gadut (Seremban F.M.S)" என்பவர் காலஞ்சென்றதாக வறிந்து மிக்க விசனிக்கிறோம். அவர் புத்தகங்களுக்கனுப்பிய ரூபாயில் 1—13—0 நம்மிடம் மிச்சமிருப்பதோடு இம்மாதமுதல் 1921ஞ ஜூன்வரையில் சஞ்சிகையும் அவருக்குச் சேரவேண்டியிருக்கிறது. அவருடைய வாரிசுதார் யாரேனுமிருப்பின் அவ்வூர் கிராம முன்சீபு நற்சாட்சிப் பத்திரத்தோடு நமக்குத் தெரிவித்து மேற்கண்டவற்றைப் பெற்றுக்கொள்ளக் கோருகிறோம்.

பத்திராதிபர்.

### தெய்வசக்தியால் கண்ணவிந்து போய்விட்டது.

வங்காளத்தில் கோடகிரி என்ற கிராமத்தில் ஆலமரத்தடியில் சிவலிங்கமொன்று வைக்கப்பட்டிருந்ததாகவும் அந்த மரத்தை ஒருவர் தொடவேண்டுமானால் அந்த லிங்கத்தைத் தொட்டுத்தா னாகவேண்டுமென்றும் ஒருவன் பலபேர்கள் தடுக்கையில் அந்த லிங்கத்தின்மேல் ஏறிக்கொண்டு மரத்தை வெட்டினதாகவும் அவனுக்கு அன்றிரவே ஜுரம்வந்துகண்ணில் உபாதி உண்டாகி, கடைசியாகக் கண்ணவிந்து விட்டதாகவும் வங்காளப் பத்திரிகைகள் அறிவிக்கின்றன. தெய்வமகிமையை யறியாது மேல்நாட்டுக் கல்வியறிவால் விதண்டவாதம் பேசும் போலிமக்கள் இதற்கென்ன சொல்லுவார்கள்.

27—9—1920,

ஐயா, ஓர் கடிதம். பாலக்காடு.

தாங்கள் அனுப்பிவைத்த "ஆனந்தபோதினி" மாதாந்தரப் பத்திரிகை கிடைக்கப்பெற்றேன். இதிலெழுதி யிருக்கிற விஷயங்களை முற்றிலும் கவனமாய்ப் பார்வையிட்டேன். மிகவும் மேலானவையாகவே இருக்கின்றன. வேறு மாதாந்தரப் பத்திரிகைகள் வருவித்தும் படித்துப் பார்த்துமிருக்கிறேன். ஆனந்தபோதினியில் எழுதப்பட்டுள்ளவற்றி லென்மனம் பாய்ந்த வண்ணம் வேறு பார்வையிட்டவைகளில் பாய்ந்ததே கிடையாது. ஆகையாலினி யெந்தக்காலமும் தவருது. "ஆனந்தபோதினி" சஞ்சிகையைப் பார்வையிட்டுக்கொள்ளும் பொருட்டு ஸர்வக்ஞனை பகவா னனுக்கிரகிக்கப் பிரார்த்திக்கிறேன்.

சாற்றுக்கவி (கலித்துறை.)

எங்கட் குருஞ்சிவன் கைலையை யும்விண்டு வீரத் தையும்
வெங்கட் கரும்பணி யிந்துவை யும்போகி வேழத் தையும்
அங்கட் கமலனஞ் சத்தையும் காண்கில ராய்கின் றனர்
திங்கட்கு நல்குமா னந்தமா போதினிச் சீர்த்தி கண்டே.

K. காசிநாத ஜோசியர்.

கன்னாட்டுக் கோமகன் விஜயம்.—கன்னாட்டுக் கோமகன் சென்னைக்கு, அடுத்த ஜனவரிமீ 10-ம் தேதி வந்திறங்கி 14-ம் தேதி வரையில் தாமதித்திருந்து, 15-ந் தேதி பிரயாணப்படுவாரெனத் தெரிகிறது.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்

## இரௌத்திரிஞு மார்கழிமீ—சாலிவாகனம் 1843-கலியுகாதி 5022

## பசலி 1329-30—கோல்லம் 1095-96—ஹிஜரி-1338-39

## இங்கிலீஷ் 1920ஞு டிஸம்பர்மீ—ஜனவரிமீ

| மார்கழிமீ | டிஸம்பர்மீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | பு | ப-43-10 | திரு-7-42 | சி-9பி | தேவதாபூஜை |
| 2 | 16 | வி | சஷ்46-40 | அவி-13-34 | சி-13ம | சீமந்தம், பும்ஸவனம் |
| 3 | 17 | வெ | சப்-49-11 | சத-17-6 | சி-60 | ஆபரணம்பெற |
| 4 | 18 | ச | அ-51-9 | பூட்-20-58 | ம-20சி | பிரயாணம் |
| 5 | 19 | ஞா | நவ-51-22 | உட்-22-35 | அ-60 | சீமந்தம் |
| 6 | 20 | தி | தச-49-57 | ரே-23-22 | சித்-60 | பிரயாண, ஆபரணம்பெற |
| 7 | 21 | செ | ஏ-47-6 | அசு-23-18 | சிஅ-60 | மூக்கோடி ஏகாதசி |
| 8 | 22 | பு | து-44-2 | பர-21-33 | சி-60அ | ...... .... |
| 9 | 23 | வி | தி-39-45 | *கிரு-19-16 | ம-உ | கிருத்திகை. |
| 10 | 24 | வெ | ச-34-51 | ரோ-16-12 | ம-16சி | சீமந்தம் கர்ணபரணம் |
| 11 | 25 | ச | ○-29-19 | மிரு-12-39 | சித்-60 | கரிநாள் |
| 12 | 26 | ஞா | பிர-23-30 | திரு-8-40 | சித்-60 | கருப்புதானியங்கொள் |
| 13 | 27 | தி | துவி17-33 | புன-4-40 | அ-சி-60 | பூமுடித்தல் சீமந்தம் |
| 14 | 28 | செ | திரு-11-51 | பூச-0-22 | சித்-60 | பிரயாணம் |
| 15 | 29 | பு | சது-6-21 | ஆயி-56-3 | சி-52அ | சபைபுராணம் |
| 16 | 30 | வி | பஞ்-1-8<br>சஷ்-55-29 | மக-52-54<br>பூர-50-12 | சி-50-ம | ........... |
| 17 | 31 | வெ | சப்-53-20 | உத்-48-15 | சி-48அ | பிரயாணம் |
| 18 | 1 | சனி | அஷ்50-53 | அஸ்-47-14 | மர-60 | ... .......... |
| 19 | 2 | ஞா | நவ-49-32 | சித்-47-18 | சித்-60 | சீமந்தம் |
| 20 | 3 | தி | தச-49-24 | சுவா-42-26 | அ-42ம | பும்ஸவனம் |
| 21 | 4 | செ | ஏ-50-1 | விசா-51-9 | சி-51ம | |
| 22 | 5 | பு | து-53-5 | அனு-54-6 | அசி-60 | |
| 23 | 6 | வி | தி-55-49 | கேட்-60-0 | பிர-60 | |
| 24 | 7 | வெ | ச-60-0 | கே-0-5 | அமி-60 | |
| 25 | 8 | சனி | சது-1-42 | மூல-5-53 | சித்-60 | |
| 26 | 9 | ஞா | அ●7-4 | பூரா-12-18 | சி-12-அ | |
| 27 | 10 | திங் | பிர-12-27 | உரா-18-47 | ம-18-அ | |
| 28 | 11 | செ | து-17-50 | திரு-25-2 | சித்-60 | |
| 29 | 12 | பு | தி-22-20 | அவி-30-47 | பி-30-சி | |

1920ஞு ஜனவரிமீ

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| செ<br>சுக் | 12-தனு-பு<br>13-கு-செ<br>17-கு-செ<br>29 மக புத | | குரு |
| சூரி<br>புத | | ராகு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE “ANANDA BODHINI” PRESS, 15, VENKATESA MAISTRY STREET, MADRAS.